1233

உமாபதி சிவாசாரியார் அருளிச் செய்த

# திருவருட்பயன்



ஸ்ரீ உமாபதி சிவாசாரியார்
சித்திரை அஸ்தம்



சிறுவர்க்கேற்ற எளிய உரையும் வினவிடையும்

டாக்டர் கோமதி சூரியமூர்த்தி

73-4

# உமாபதி சிவாசாரியார் அருளிச் செய்த திருவருட்பயன்



## சிறுவர்க்கேற்ற எளிய உரையும் வினாவிடையும்

அன்பளிப்பு:
தஞ்சாவூர்
நடராஜ பிள்ளை உலகநாதன் M.A.B.T

டாக்டர் கோமதி சூரியமூர்த்தி




வெளியீடு
ஈசுவரகம்
391, இந்திரா காந்தி தெரு, ஆழ்வார் நகர்,
மதுரை – 625 019.

## பதிப்பு விவரங்கள்

1. நூற் பெயர் : உமாபதி சிவாசாரியார் அருளிச் செய்த திருவருட்பயன் — சிறுவர்க்கேற்ற எளிய உரையும் வினாவிடையும்

2. ஆசிரியர் : டாக்டர் கோமதி சூரியமூர்த்தி,
சைவசித்தாந்தத் தத்துவத்துறை,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை - 21.

3. மொழி : தமிழ்

4. பதிப்பு : முதல் பதிப்பு

5. அச்சிட்ட நாள் : ஏப்ரல், 1997



7. நூல் அளவு : டிம்மி 1×8

8. மொத்த பக்கங்கள் : 76

9. படிகள் : 1000

10. அச்சிட்டோர் : ஸ்ரீ தம்பி பிரிண்டர்ஸ்
நாகமலை, மதுரை - 625 019

11. விலை : ரூ. 18

12. வெளியீடு : ஈசுவரகம்,
391. இந்திரா காந்தி தெரு,
ஆழ்வார் நகர்,
மதுரை 625 019. ☎ 858318

13. பொருள் : சைவசித்தாந்த விளக்கம்

# முன்னுரை

சைவசித்தாந்தத் தத்துவம் ஒரு கடல்; படிப்பது கடினம் என்ற எண்ணம் சில ஆண்டுகட்கு முன்வரை மாணவர்களிடையே நிலவி வந்தது. காரணம் என்ன? சித்தாந்த சாத்திர நூல்கள் சூத்திரவடிவிலும், செய்யுள் வடிவிலும் அமைந்திருந்தன. சுமார் அறுபது ஆண்டுகட்கு முன் எழுதப்பட்ட உரைகளும் எளிமையான நடையில் இல்லை. இப்போது சாத்திர நூல்கள் அனைத்திற்கும் எளிமையான உரைகள் வெளிவந்துள்ளன. சாத்திர நூல்கள் கற்க விரும்புவோர் முதலில் படிக்க வேண்டியது திருவருட்பயன் என்னும் சாத்திர நூலாகும். அது திருக்குறளைப் போல் குறள் வெண்பாவால் ஆனது. திருக்குறளைப் படிக்கும் சிறுவர்கட்குத் திருவருட்பயன் படிப்பது கடினம் அல்லவே. இளமையில் கற்பது பசுமரத்தாணி போல் மனத்தில் பதியும் அல்லவா? திருவருட்பயன் சாத்திர நூலுக்குப் பல அரிய உரைகள் வெளிவந்திருந்த போதிலும் சிறுவர்களைக் கருத்தில் கொண்டு இந்த எளிய உரையும், வினாவிடையும் வெளிவருகின்றது. இவ்வுரைக்கு முன்னோடிகளாக விளங்கிய ஆ. ஈசுவரமூர்த்திப்பிள்ளை, சு. சிவபாத சுந்தரம், க. வச்சிரவேல் முதலியார் முதலானோர்க்கு அடியேனின் உளங்கனிந்த நன்றி உரித்தாகுக. இந்நூலுக்கு அணிந்துரை வழங்கியுள்ள சைவசித்தாந்தத்துறைப் பேராசிரியர் முனைவர் ஆ. ஆனந்தராஜ் அவர்கட்கும் என் இதயங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

மதுரை
18-4-'97

கோமதி சூரியமூர்த்தி

# அணிந்துரை

- முனைவர். ஆ. ஆனந்த ராசன்

செந்தமிழ் நாட்டுச் சிறுவர் சிறுமியர் சைவ நெறிப் பாடல்களைப் படித்துச் சிந்தையிற் கொள்வதோடு நில்லாமல், சித்தாந்த உண்மைகளையும் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற சிறந்த நோக்கோடு அவர்களை முன்நிறுத்தி எழுதப்பட்ட நூல் இதுவாகும்.

சைவ சித்தாந்த உண்மைகளைக் கூறுகிற சாத்திர நூல்கள் பல. அவற்றுள்ளே, எளிமையும், தெளிவும், முழுமையும், சிறுர்க் கேற்ற இயல்பும் உடையதாய் விளக்குவது திருவருட்பயன்.

பத்துத் தலைப்புக்கள் தலைப்புக்குப் பத்துச் செய்யுட்கள், அச் செய்யுட்களும் இரண்டே அடிகளையுடைய குறட்பாவாய் அமைதல் என இவ்வாறு தொடக்க நிலையினரும் விரும்பிப் பயிலுதற்கு ஏற்ற முறையில் திருவருட்பயன் அமைந்திருத்தல் காணலாம்.

நூலில் தான் எத்தனை எத்தனை எடுத்துக் காட்டுகள்! எத்தனை பிறிது மொழிதல்கள்! நோக்கிய இடமெல்லாம் எத்தனை நயங்கள்! எத்தகைய சொல்லாட்சிகள்! இவற்றை யெல்லாம் கையாண்டு நுண்பொருளை எண்பொருளாக்கிச் சொல்லியிருக்கும் உமாபதி சிவத்தின் கலைவன்மையையும், கருணையுள்ளத்தையும் என்னென்பது!

திருவருட்பயனுக்கு அமைந்த உரைகளுள் எளியவருக் கென்று எழுதப்பெற்ற உரையெனக் குறிப்பிடத்தக்கவை திரு.ஆ.ஈசுரமூர்த்திப்பிள்ளை எழுதிய உரையும், திரு. சு.சிவபாத சுந்தரம் எழுதிய உரையும் ஆகும். அவற்றுள் முன்னைய உரை பதவுரையாக அமைந்தது. பின்னைய உரை பொழிப்புரையும் விரிவான விளக்கவுரையுமாக அமைந்தது.

அவர்கள் சென்ற நெறியிலேயே இந்நூலாசிரியர், முனைவர். திருமதி. கோமதி சூரியமூர்த்தியும் சென்றுள்ளார். பதச்சேதம் செய்து சொற்பொருள் காட்டியும் வேண்டிய இடங்களில் விளக்கங்கள் கொடுத்தும் இவ்வெளிய உரையை அமைத்துள்ளார்.

இந்நூலின் மற்றொரு சிறப்பு. நூற்றுக்கு மேற்பட்ட வினாக்களைக் கேட்டு அவற்றுக்குரிய விடையையும் தாமே அளித்துள்ளமையாகும். இவ்வினாவிடைப்பகுதி பள்ளியிற் பயிலும் பாலகரைக் கருத்திற் கொண்டு அமைக்கப்பட்டதாகும். இப்பகுதியைப் படித்தாலே நூல் முழுவதையும் படித்த தெளிவுணர்ச்சியைப் பெற்றவராவர்.

இளஞ்சிறுர்களை முன்வைத்து இந்நூலாசிரியர் செய்துள்ள இம்முயற்சி பெரிதும் போற்றுதற்குரியதாகும். சிறப்பாக இளையவருக்கும், பொதுவாக எல்லோர்க்கும் பயன்படும் இந்நூல் சைவ சமயவுலகில் நல்ல வரவேற்பைப் பெறும் என்று நம்புகிறேன்.

அன்பளிப்பு :

தஞ்சாவூர்

நடராசபிள்ளை உலகநாதன் M.A.B.T

# திருவருட்பயன்

## நூல் அறிமுகம்

திருவருட்பயன் என்பது திருவருளின் பயனை விளக்கும் நூல் என விரியும். இதன் ஆசிரியர் உமாபதிசிவம். இந்நூல் நூறு குறள் வெண்பாக்களைக் கொண்டது. பத்து அதிகாரங்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு அதிகாரமும் பத்துக் குறள்களைக் கொண்டது. அப்பத்து அதிகாரங்களாவன :

1. பதிமுதுநிலை
2. உயிரவைநிலை
3. இருள்மலநிலை
4. அருளதுநிலை
5. அருளுருநிலை
6. அறியும்நெறி
7. உயிர் விளக்கம்
8. இன்புறுநிலை
9. ஐந்தெழுத்து அருள்நிலை
10. அணைந்தோர் தன்மை

முதல் ஐந்து அதிகாரம் பொது எனவும், பின் ஐந்து அதிகாரம் சிறப்பு எனவும் கூறப்படும். ஒரு அதிகாரத்திற்கும் மற்றொரு அதிகாரத்திற்கும் தொடர் இயைபு உண்டு. அது பத்து அதிகாரங்களையும் உங்களுக்கு வரிசைக் கிரமமாக நினைவில் வைக்க உதவும்.

சைவசித்தாந்தம் கூறும் பொருட்கள் மூன்று. அவை இறை, உயிர், உலகு. இவற்றைக் குறிக்கும் தத்துவக் கலைச் சொற்கள் முறையே பதி, பசு, பாசம் என்பனவாம். இம்முப்பொருள்களுள் மேலான பொருள் பதி. அவன் ஒருவன். எனவே முதற்கண் பதிமுதுநிலை என்ற அதிகாரம் அமைத்தார். அந்த இறைவனை உணர்ந்து இன்புறுதற்குரியன உயிர்கள். அவை பல. எனவே பதிமுதுநிலையை அடுத்து இரண்டாவதாக உயிரவைநிலை வைத்தார். (அவை - பன்மையைக் குறிக்கும் சொல்.) இறைவனை உணராவண்ணம் உயிர்தனை மறைக்கும் முதற்றடைப்பொருள் இருள்மலம் எனப்படும் ஆணவம். எனவே உயிரவைநிலையை அடுத்து மூன்றாவதாக இருள்மலநிலை அதிகாரம் அமைத்தார். இருள்மலம் திருவருளாலேயே நீக்கப்பட வேண்டும். ஆதலால் நான்காவதாக அருளதுநிலை கூறுகின்றார். அருள் என்பது பண்பு.

அருவமானது. யாவற்றாலும் அறிவதற்கு அரியது. எனவே உயிர்கள் தன்னை உணர்ந்து உய்யும் பொருட்டு அருளானது உருவம் தாங்கி வர வேண்டும். எனவே அடுத்ததாக (ஐந்தாவது) அருளுருநிலை அமைத்தார். அருளுரு கூறும் அருள் மொழிகளை உயிர்கள் கேட்டு, சிந்தித்து, தெளிவு பெற வேண்டுமாதலால் அடுத்து அறியும் நெறி (ஆறுவது) கூறப்படுகின்றது. இதனால் உயிர்களின் அக இருளாகிய மாசு நீங்கி விளக்கம் பெறுவதால் அறியும் நெறியை அடுத்து உயிர் விளக்கம் (ஏழாவது) கூறப்படுகின்றது. மாசுநீங்கித் தூய்மை பெற்ற உயிர் இறையின்பத்தில் திளைக்குமாதலால் அடுத்து இன்புறுநிலை (எட்டாவது) அமைத்தார். அந்த இன்பநிலையிலிருந்து பிறழாதிருக்க ஐந்தெழுத்து மந்திரத்தை ஓத வேண்டும் என்பதை உணர்த்த அடுத்து ஐந்தெழுத்து அருள்நிலை (ஒன்பதாவது) வைத்தார். உயிர்களின் முடிந்த முடிவான குறிக்கோள் பாசத்தை விட்டு நீங்கிப் பதியை உணர்ந்து அழுந்தி அனுபவித்தலாகும். எனவே இறுதியாக அணைந்தோர் தன்மை கூறுகின்றார். அணைந்தோர் என்பவர்கள் சீவன் முத்தர்கள் எனப்படுவர். இவ்வுடலுள்ளபோதே இறைவனை உணர்ந்து பேரின்பம் துய்ப்பதே சீவன் முத்தி எனப்படும். அத்தகைய பேரின்பத்தைத் துய்ப்பவர்கள் சீவன் முத்தர்கள் எனப்படுவர். இறுதி அதிகாரம் சீவன்முத்தர்களின் இயல்புகளை எடுத்துரைக்கின்றது.

சிறுவர், சிறுமிகளே! இனி இந்நூலைப் படிக்க ஆரம்பிக்கலாமா? உங்கள் வீட்டில் பெரியவர்கள் எதை எழுதத் தொடங்கினாலும் முதலில் பிள்ளையார் சுழி 'உ' போடுவதைப் பார்த்திருப்பீர்கள். வீட்டில் பண்டிகை காலங்களில் முதலில் மஞ்சளிலோ, சாணத்திலோ பிள்ளையார் பிடித்து வைப்பதைப் பார்த்திருப்பீர்கள். ஏன் தெரியுமா? பிள்ளையார்க்குரிய பல பெயர்களுள் விக்னேசுவரர் என்பதும் ஒன்றாகும். விக்னேசுவரர் என்றால் இடையூறை நீக்குபவர் எனப் பொருள். செய்யும் காரியம் தடங்கலின்றி முடிய முதலில் விநாயகரை வழிபடுவது மரபு. அதேபோல் நூல் இயற்றுவோர் நூல் இடையூறின்றி முற்றுப்பெறும் பொருட்டு முதற்கண் விநாயகர் மீது காப்புச் செய்யுள் பாடுவது மரபு. உமாபதிசிவாசாரியர் சிவஞானம் பெற்றவர். "தான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்"

என்றபடி அந்த ஞானத்தை நமக்கு வழங்க கருணையுள்ளம் கொண்டவர். அவருடைய நூல் இடையூறின்றி முடியும் என்பதில் ஐயம் சிறிதும் இல்லை. நாமெல்லாம் மரபைப் பின்பற்றி நடக்க வேண்டும் என்பதை உணர்த்த அவரும் விநாயகர் மீது காப்புச் செய்யுள் பாடித் தம் நூலைத் தொடங்குகின்றார்.

# திருவருட்பயன்

## காப்பு

நல் குஞ்சரக்கன்று நண்ணில் கலைஞானம்
கற்கும் சரக்கன்று காண்.

**பதவுரை**

| | |
|---|---|
| நல் | — நல்ல |
| குஞ்சரக்கன்று | — இளமை பொருந்திய யானை முகமுடைய விநாயகப் பெருமானை |
| நண்ணில் | — மனம், வாக்கு, காயத்தால் வழிபட்டால் |
| கலைஞானம் | — ஞானசாத்திர நூல்கள் (எல்லா நூல்களையும் குறிக்கும்) |
| கற்கும் சரக்கு அன்று | — வருந்திக் கற்க வேண்டிய பண்டம் அன்று |
| காண் | — இதை நீ அறிவாயாக |

**தெளிவுரை**

விநாயகப் பெருமானை மனம், வாக்கு, காயம் ஒன்றுபட வழிபடுபவர்கட்கு கல்வி வருந்திக் கற்காமல் எளிதாக வரும்.



# நூல்

## 1. பதிமுதுநிலை

1 அகர உயிர்போல் அறிவாகி எங்கும்
நிகரில் இறை நிற்கும் நிறைந்து.

**பதவுரை**

| | | |
|---|---|---|
| அகர உயிர் போல் | — | அ என்னும் உயிரெழுத்து மற்றைய எல்லா எழுத்துகட்கும் முதலாய் அவற்றின் வேறறக் கலந்தாற் போல் |
| நிகரில் இறை | — | ஒப்பற்ற இறைவன் |
| எங்கும் நிறைந்து | — | எல்லாப் பொருள்களிடத்தும் எல்லா இடங்களிலும் கலந்து |
| அறிவாகி | — | ஞானமே வடிவாகி |
| நிற்கும் | — | தொடக்கமும், முடிவுமின்றி நிற்கும் |

**தெளிவுரை :**

அ என்னும் எழுத்து எல்லா எழுத்துக்களுடனும் கலந்து ஒலிப்பது போல, முழுமுதற் பொருளான இறைவன் எல்லாப் பொருள்களிடத்தும் உயிர்களிடத்தும் கலந்துள்ளான். ஞானமே வடிவானவன். தொடக்கமும், முடிவுமின்றி நிற்பவன்.

2 தன்னிலைமை மன்னுயிர்கள் சாரத் தரும் சக்தி
பின்னமிலான் எங்கள் பிரான்.

**பதவுரை**

| | | |
|---|---|---|
| தன்னிலைமை | — | 1 தெய்வத் தன்மையை<br>2 இறைவனுக்குரிய எண் குணங்களை<br>3 பேரின்ப நிலைமையை |
| மன்னுயிர்கள் | — | நிலைபெற்ற உயிர்கள் |
| சார | — | சாரும்படி (பொருந்தும்படி) |
| தரும் | — | உபகாரம் செய்கின்ற |
| சக்தி | — | திருவருளோடு |
| பின்னமிலான் | — | பிரிப்பின்றி நிற்பார் |
| எங்கள் பிரான் | — | எங்கள் சிவபெருமான் |

**தெளிவுரை :**

தன்னைச் சாரும் உயிர்கள் பேரின்பம் பெறும்படி உதவுகின்ற திருவருளோடு எங்கள் தலைவனான சிவபெருமான பிரிதலில்லாது நிற்பான்.

3 பெருமைக்கும் நுண்மைக்கும் பேரருட் கும் பேற்றின்
அருமைக்கும் ஒப்பின்மை யான்.

**பதவுரை :**

| | |
|---|---|
| பெருமைக்கும் | — உலகமனைத்தும் தன்னுள் அடங்கக் கொண்ட பெருமையுடைமைக்கும் |
| நுண்மைக்கும் | — உயிர்க்குள் உயிராய் விளங்கும் நுட்பமான தன்மைக்கும் |
| பேரருட்கும் | — உயிர்களிடத்து பெருங்கருணை உடைமைக்கும் |
| பேற்றின் அருமைக்கும் | — அடைதற்கரிய வீடுபேற்றினைத் தரும் தன்மைக்கும் |
| ஒப்பின்மையான் | — தமக்கு ஒப்பில்லாதவர் சிவபெருமான் |

**தெளிவுரை :**

உலகமனைத்தும் சிவபெருமான் தன்னுள் அடங்கக் கொண்ட பெருமையுடையவன். உயிர்க்குள் உயிராய் விளங்கும் நுட்பமானவன். உயிர்களிடத்து பெருங்கருணை உடையவன். உயிர்க்கட்கு வீடுபேற்றைத் தருபவன். அவர் தமக்கு ஒப்பு ஒருவரும் இல்லாதவர்.

4 ஆக்கி எவையும் அளித்து ஆசுடன் அடங்கப்
போக்குமவன் போகாப் புகல்.

**பதவுரை :**

| | |
|---|---|
| எவையும் | — உலகமனைத்தையும் |
| ஆக்கி | — படைத்து |
| அளித்து | — காத்து |
| ஆசுடன் அடங்க | — மலப்பிணிப்பினின்றும் நீங்காத உயிர்கள் அம்மலத்தோடு அடங்கி நிற்கும்படி |
| போக்கும் அவன் | — ஒடுக்கத்தைச் செய்கின்ற சிவபெருமான் |
| போகாப் புகல் | — எக்காலத்தும் உயிர்களை விட்டு நீங்காத புகலிடமாய் உள்ளான் |

**தெளிவுரை**

சிவபெருமானே உலகனைத்தும் படைத்து, காத்து, ஒடுக்குகிறான். அவனே உயிர்கட்குப் புகலிடம் ஆவான்.

5 அருவும் உருவும் அறிஞர்க்கு அறிவாம்
உருவும் உடையான் உளன்.

**பதவுரை :**

| | |
|---|---|
| அருவும் | — அருவத் திருமேனியையும் |
| உருவும் | — உருவத் திருமேனியையும் |
| (அருவுருவம்) | — அருவுருவத் திருமேனியையும் |
| உளன் | — உடையவன் |
| அறிஞர்க்கு | — ஞானிகட்கு |
| அறிவாம் உருவம் | — ஞானவடிவாய் |
| உடையான் | — விளங்குபவன் எம் தலைவரான சிவபெருமான் |
| (அருவம் | — கண்ணுக்குப் புலனாகாது |
| உருவம் | — கண்ணுக்குப் புலனாவது. கை, கால் போன்ற அவயவப் பகுப்பு உடையது |
| அருவுருவம் | — கண்ணுக்குப் புலனாவது. அவயவப் பகுப்பு இல்லாதது) |

**தெளிவுரை**

சிவபெருமான் அருவம், அருவுருவம், உருவம் என்ற மூவகைத் திருமேனிகளை உடையவன். ஞானிகட்கு ஞானமே வடிவாய் விளங்குபவன்

6 *பல் ஆருயிர் உணரும் பான்மையென மேல்ஒருவன்*
*இல்லாதான் எங்கள் இறை.*

**பதவுரை**

| | |
|---|---|
| பல் ஆருயிர் | — பலவாகிய உயிர்கள் |
| உணரும் பான்மையென | — இறைவன் அறிவிக்க அறியும் தன்மை உடையவை போல |
| எங்கள் இறை | — எங்களுடைய சிவபெருமான் |
| மேல் ஒருவன் இல்லாதான் | — தனக்கு அறிவிக்க தனக்கு மேல் ஒரு தலைவன் இல்லாதவன் |

**தெளிவுரை**

உயிர்கள் இறைவன் அறிவிக்க அறிவன, இறைவன் தானே அறிபவன். உயிர்கட்குத் தலைவர் சிவபெருமான், சிவபெரு-மானுக்கு மேல் தலைவர் எவரும் இல்லை.

7 *ஆறு அறிவாய் அகலான் அடியவர்க்கு*
*வானவர் காணாத மன்.*

**பதவுரை**

| | |
|---|---|
| வான் நாடர் | — பிரமன், திருமால் போன்ற தேவர்களும் |
| காணாத மன் | — காண முடியாத சிவபெருமான் |
| அடியவர்க்கு | — மெய்யன்பர்கட்கு |
| ஆனா அறிவாய் | — நீங்காத அறிவாய் விளங்கி |
| அகலான் | — அவர்களை விட்டுப் பிரியாது நிற்பன் |

**தெளிவுரை**

தேவர்களும் காண்பதற்கரிய சிவபெருமான், உண்மை அன்புடைய அடியவர்களின் அறிவுக்கு அறிவாகி அவர்களை விட்டுப் பிரியாது நிற்பன்.

## 8 ஏங்கும் ஏவையும் ஏரியுறு நீர்போல் ஏகம் தங்கும் அவன்தானே தனி.

**பதவுரை**

| | |
|---|---|
| எங்கும் | - எல்லா உலகங்களிலும் |
| எவையும் | — எல்லா உயிர்களிடத்தும் |
| நீர் உறு எரிபோல் | - வெந்நீரில் பொருந்திய வெப்பம் போல |
| ஏகம் தங்கும் | — இரண்டறக் கலந்து தங்கி நிற்பார் |
| அவன் தானே | — அச்சிவபெருமான் |
| தனி | — அவற்றில் தோயாது தனித்து நிற்பார் |

**தெளிவுரை**

வெந்நீரில் வெப்பம் எல்லா இடத்திலும் பரவி இருப்பது போல, சிவபெருமான் எல்லா உலகங்களிலும், எல்லா உயிர் களிடத்தும் இரண்டறக் கலந்து வியாபித்து நிற்பார். ஆயினும் அவற்றில் தோயாது தனித்து நிற்பார்.

## 9 நலம் இலன் நண்ணார்க்கு நண்ணினர்க்கு நல்லன் சலம் இலன் பேர் சங்கரன்.

**பதவுரை**

| | |
|---|---|
| நண்ணார்க்கு | — தன்னை வழிபடாத உயிர்கட்கு |
| நலம் இலன் | — நன்மையைச் (அருள்) செய்யான் |
| நண்ணினர்க்கு | — தன்னை மனம், வாக்கு, காயத்தால் வழிபடுபவர்கட்கு |
| நல்லன் | — நன்மையைச் (அருள்) செய்வான் |
| சலமிலன் | — அவன் பாரபட்சமுடையவன் எனக் கருதிவிடக் கூடாது என்று பார்பட்ச |

| | |
|---|---|
| | மில்லாதவன் என்கின்றார் |
| பேர் சங்கரன் | — அவனுடைய சிறப்புப் பெயர் சங்கரன் என்பது சம் - சுகம் கரன் - செய்பவன் எல்லா உயிர்கட்கும் சுகத்தைச் செய்பவன் எனப் பொருள் |

**தெளிவுரை**

சிவபெருமான் தன்னை வழிபடாதவர்கட்கு அருள் செய்யான். தன்னை மனம், வாக்கு, காயத்தால் வழிபடும் அடியவர்கட்கு அருள் செய்வான். செய்பவர் செயலுக்குத் தக்க பயன் தருதலால் அவன் பாரபட்சம் இல்லாதவன். அவன் எல்லா உயிர்கட்கும் சுகத்தைச் செய்ய விருப்பம் உடையவன். ஆதலால் அவன் சிறப்புப் பெயரே சங்கரன் என்பதாம்.

*10 உன்னும் உளது ஐயம் இலது உணர்வாய் ஓவாது*
*மன்னுபவம் தீர்க்கும் மருந்து.*

**பதவுரை**

| | |
|---|---|
| உணர்வாய் | — சிவபெருமான் அறிவுக்கு அறிவாய் |
| ஓவாது | — உயிர்களை விட்டு நீங்காதிருந்து |
| மன்னுபவம் | — அவற்றைத் தொடர்ந்து வரும் பிறவிநோயை |
| தீர்க்கும் | — போக்குகின்ற |
| மருந்து | — மருந்தாக விளங்குவார் |
| ஐயம் இலது | — இதில் சந்தேகம் இல்லை |
| உன்னும் | — அவரைத் தியானியுங்கள் |
| உளது | — அவர் உங்கள் உள்ளத்தில் இருப்பார் |

**தெளிவுரை**

அறிவுக்கு அறிவாய் உயிர்களை விட்டு நீங்காதிருந்து அவற்றின் பிறவி நோயைப் போக்கும் மருந்தாக விளங்குபவன் சிவபெருமான் என்பதில் சிறிதும் ஐயம் இல்லை. எனவே அவரை உள்ளத்திலிருத்தி தியானியுங்கள்.

## 2. உயிரவை நிலை

*11 பிறந்த நாள் மேலும் பிறக்கும் நாள் போலும்*
*துறந்தோர் துறப்போர் தொகை.*

**பதவுரை**

| | |
|---|---|
| துறந்தோர் (தொகை) | — இதற்குமுன் முக்தி அடைந்தவர்களின் தொகையும் |

துறப்போர் (தொகை) — இனிமேல் முக்தி அடைய இருப்பவர்களின் தொகையும் (எத்தனை எனக் கேட்டால்)

பிறந்தநாள் (தொகை) — சிருஷ்டிக்கால முதல் இதுவரை பிறந்து இறந்து உழன்ற நாட்களின் தொகையையும்

மேலும் பிறக்குநாள் (தொகை) — சங்காரகாலம் வரை இனியும் பிறப்பு இறப்புக்கு உட்பட வேண்டிய நாட்களின் தொகையையும்

போலும் — ஒத்திருக்கும்

**தெளிவுரை**

உயிர்களின் எண்ணிக்கை கணக்கில் அடங்காது.

## 12 திரிமலத்தார் ஒன்று அதனிற் சென்றார்கள் அன்றி ஒரு மலத்தாராயும் உளர்.

**பதவுரை**

திரிமலத்தார் — மூன்று மலங்களால் கட்டப்பட்டவர். மூன்று மலங்களாவன : ஆணவம், கன்மம், மாயை

ஒன்று அதனில் சென்றார்கள் — மூன்று மலங்களில் ஒன்று குறைய இருமலமுடையவர்கள் (ஆணவம், கன்மம் உடையவர்கள்)

அன்றி — இவ்விருவகையினைத் தவிர

ஒரு மலத்தாராயும் — ஆணவம் என்ற ஒரு மலம் மட்டும் உடையவர்களாயும்

உளர் — (ஆன்மாக்கள்) இருப்பர்

**தெளிவுரை**

மும்மலத்தார் — சகலர் எனப்படுவர்

இருமலத்தார் — பிரளயாகலர் எனப்படுவர்

ஒருமலத்தார் — விஞ்ஞானகலர் எனப்படுவர்.

இவ்வாறு உயிர்கள் மூவகைப்படும்.

## 13 மூன்று திறத்து உள்ளாரும் மூல மலத்து உள்ளார்கள் தோன்றலர் தொத்து உள்ளார் துணை.

**பதவுரை**

| | |
|---|---|
| மூன்று திறத்து உள்ளாரும் | — முற்கூறிய மூவகை உயிர்களும் |
| மூலமலத்து உள்ளார்கள் | — மூலமலம் என்று சொல்லப்படும் ஆணவமலத்தால் பிணிக்கப்பட்டவர்கள் |
| துணை உள்ளார் | — தோன்றாத் துணையாக இறைவன் இருப்பதையும், |
| தொத்து | — தாங்கள் அவனுக்கு அடிமை என்பதையும் (தொத்து-அடிமை) |
| தோன்றலர் | — அறியார் |

**தெளிவுரை**

மூவகை உயிர்களும் ஆணவமலத்தால் பிணிக்கப்பட்டவையே. அப்பிணிப்பும் மூன்று திறத்ததாய் அமையும். விஞ்ஞானகலரை ஆணவமலம் மென்மையாயும், பிரளயாகலரை சற்று வன்மையாகவும், சகலரை மிக வன்மையாகவும் பிணித்திருக்கும். ஆணவமலம் மிக வன்மையாகப் பிணிக்கப்பட்டிருப்பதால், சகலர் தோன்றாத் துணையாக இறைவன் இருப்பதையும், தாங்கள் அவனுக்கு அடிமை என்பதையும் அறியார்.

## 14 கண்டவற்றை நாளும் கனவில் கலங்கியிடும்
## திண் திறலுக்கு என்னோ செயல்.

**பதவுரை**

| | |
|---|---|
| நாளும் | — தினந்தோறும் |
| கண்டவற்றை | — கனவில் காண்கின்ற பொருள்களை |
| கனவில் | — சொப்பனத்தில் |
| கலங்கியிடும் | — மாறுபடக் காண்கின்ற |
| திண் திறலுக்கு | — அற்ப திறமையுடைய உயிர்கட்கு |
| செயல் என்னோ | — சுதந்தரமான செயல் ஏது? |

(திண் திறல் என்றது இகழ்ச்சிக் குறிப்பு)

**தெளிவுரை**

உயிர்கள் சுதந்தரமாகச் செயலாற்றும் திறமையற்றவை

## 15 பொறி இன்றி ஒன்றும் புணராத புந்திக்கு
## அறிவு என்ற பேர் நன்று அற.

**பதவுரை**

| | |
|---|---|
| பொறி இன்றி | — மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற அறிவுப் பொறிகள் ஐந்தின் உதவியின்றி |

ஒன்றும் — ஒரு விடயத்தையும்
புணராத — அறிய மாட்டாத
புந்திக்கு — புத்திக்கு.இங்கு உயிர்களைக் குறித்தது
அறிவு என்ற பேர் — அறிவுப் பொருள் என்று கூறுவது
நன்று அற — பொருத்தமானது அன்று

**தெளிவுரை**

ஐம்பொறிகளின் உதவியின்றி ஒன்றையும் அறியமுடியாத உயிர்களை அறிவுப்பொருள் என்று கூறுவது பொருத்தமானது அன்று. உயிர்கள் பொறிகளின் உதவியால் அறியும் சிற்றறிவுடையன என்பது குறிப்பு.

## 16 ஒளியும் இருளும் உலகும் அலர்கண் தெளிவு இல் எனில் என் செய?

**பதவுரை**

அலர்கண் — விழித்திருக்கும் கண்ணிற்கு
தெளிவு இல் எனில் — தெளிவாகக் காணும் தன்மை இல்லாவிடில்
ஒளியும், இருளும், உலகமும் — வெளிச்சமும், இருட்டும் உலகத்துப் பொருட்களும்
என் செய — இருந்து என்ன பயன்

**தெளிவுரை**

கண்ணுக்குக் காணும் தன்மை இல்லாவிடில் வெளிச்சம், இருட்டு, உலகத்துப் பொருட்களால் பயன் இல்லை. அது போல உயிர்களிடத்து அறிவில்லை என்றால் திருவருளொளி, ஆணவ இருள் உலகப் பொருட்கள் இவற்றால் பயனில்லை என்பது குறிப்பு. இவற்றால் உயிர் பயன்பெறுவது கண் கூடாதலால் உயிர் அறிவுப் பொருள் என்பது பெறப்படும். அறிவிக்க அறியும் பொருள் உயிர்.

## 17 சத்து அசத்தைச் சாராது அசத்து அறியாது அங்கண் இவை உய்த்தல் சதசத்தாம் உயிர்.

**பதவுரை**

சத்து — முழுமுதற்பொருள் (பதி)
அசத்தை — உலகத்தை
சாராது — சார்ந்து அனுபவியாது

அசத்து — அசத்தாகிய உலகம்
அறியாது — சடமாதலால் அது முதல்வனை அறியாது
அங்கண் — அந்நிலையில்
இவை — முதல்வனையும், உலகினையும்
உய்த்தல் — அறிந்து அனுபவிப்பது
சதசத்தாம் — சதசத்து என்று சொல்லப்படும்
உயிர் — உயிரே ஆகும்

**தெளிவுரை**

(சத்து என்பது என்றும் மாறுதலடையாத நிலைத்த பொருள் எனப்படும். இங்கு இறைவனைக் குறித்தது. அசத்து என்பது நிலையற்ற பொருள் எனப்படும். இங்கு உலகப் பொருட்களைக் குறித்தது) இறைவன் உலகத்தைச் சார்ந்து அனுபவியான். உலகப் பொருட்கள் சடமாதலால் இறைவனை அறியா. ~~சத்தாகிய இறைவனையும் அசத்தாகிய உலகையும் அறியா.~~ சத்தாகிய இறைவனையும் அசத்தாகிய உலகையும் அறிந்து அழுந்தி அனுபவித்து அதனதன் தன்மையைப் பெறுவது உயிரே ஆகும். எனவே அது சதசத்து எனப்படும்.

## 18 இருளில் இருள்ஆகி எல்இடத்தில் எல்ஆம் பொருள்கள் இலதோ புவி.

**பதவுரை**

இருளில் இருள் ஆகி — இருள் வந்தகாலத்து இருள்மயமாகியும்
எல் இடத்தில் எல் ஆம் — ஒளி வந்த காலத்தில் ஒளி மயமாகியும் இருக்கின்ற
பொருள்கள் — பதார்த்தங்கள்
புவி — இப்பூமியில்
இலதோ — இல்லையோ

**தெளிவுரை**

இருவேறுபட்ட தன்மையுடைய பொருள்களைச் சார்ந்து அதனதன் தன்மையை உயிர் பெறுவது எப்படி என வினவு-வோர்க்கு விடை கூறுவது போல் இக்குறள் அமைந்துள்ளது. உலகப்பொருட்களில் கண், படிகம், ஆகாசம் முதலியன இருளுடன் கூடி இருளாகியும் ஒளியுடன் கூடி ஒளியாகவும் விளங்கும். அதுபோல உயிர் சத்தைச் சார்ந்து சத்தாகவும், அசத்தைச் சார்ந்து அசத்தாகவும் விளங்கும் தன்மையுடையது.

19 ஊமன்கண் போல ஒளியும் மிக இருளே
வாமன்கண் காணாதவை.

**பதவுரை**

| | |
|---|---|
| ஊமன்கண் | — சூரியனுடைய ஒளியை அறியாதது ஆந்தையின் கண் |
| போல | — அதைப்போல |
| வாமன்கண் | — சிவஒளியை |
| காணாதவை | — பெத்தான்மாக்கள் (காணார்) |
| ஒளியும் மிக இருளே | — சிவ ஒளியும் இருட்டாகவே தோன்றும் |

**தெளிவுரை**

சூரியனுடைய ஒளியை ஆந்தையின் கண் காணாதது போல சிவ ஒளியை பெத்தான்மாக்கள் காணார். அவர்கட்குச் சிவ ஒளியும் இருட்டாகவே தோன்றும்.

20 அன்றளவும் ஆற்றும் உயிர் அந்தோ அருள் தெரிவது
என்று அளவொன்றில்லா இடர்.

**பதவுரை**

| | |
|---|---|
| அன்றளவும் | — அனாதி தொடங்கி |
| ஆற்றும் உயிர் | — உயிர்கள் அனுபவிக்கின்றது |
| அளவொன்றில்லா இடர் | — அளவற்ற துக்கத்தை |
| அருள் தெரிவது என்று | — உயிர்கள் அருளை உணர்வது எக்காலம் |
| அந்தோ | — இது பரிதாபத்திற்குரியது |

**தெளிவுரை**

அநாதிகாலம் தொட்டு பிணித்துள்ள ஆணவமலத்தால் உயிர்கள் அளவற்ற துன்பங்களை அநுபவிப்பதைக் கண்டு ஆசிரியர் அந்தோ எனப் பரிதாபப்படுகிறார். மேலும் உயிர் ஆணவமலம் பிணிப்பிலிருந்து நீங்கி அருளை உணர்வது எக்காலம் என நினைத்து இரங்குகிறார்.

## 3. இருள்மல நிலை

21 துன்றும் பவத்துயரும் இன்பும் துணைப்பொருளும்
இன்று என்பது எவ்வாறும் இல்.

**பதவுரை**

(துன்றுதல்-நெருங்குதல். இங்கு அனுபவித்தல் எனப் பொருள் கொள்ளலாம்)

| | |
|---|---|
| துன்றும் | — உயிர்கள் அனுபவிக்கின்ற |
| பவத்துயரும் | — பிறவித்துன்பமும் (பவம்-பிறப்பு) |
| இன்பும் | — முக்தியின்பமும் |
| துணைப் பொருளும் | — இவ்விரண்டுக்கும் காரணமான துணைப்பொருள்களும் |
| இன்று என்பது | — இல்லை என்று கூறுவது |
| எவ்வாறும் இல் | — எவ்வாற்றாலும் இல்லை |

**தெளிவுரை**

உயிர்கள் பிறவித்துன்பமும் அனுபவிக்கின்றன. முக்தியின்பமும் அனுபவிக்கின்றன. பிறவித்துன்பத்திற்குக் காரணமான பொருள்கள் ஆணவம், கன்மம், மாயை. முக்தியின்பம் அனுபவிக்கத் துணை செய்பவன் இறைவன். இவையெல்லாம் இல்லை என்று சிலர் சொல்வதற்குக் காரணம் அவர்களை மறைத்திருக்கின்ற ஆணவ இருள்.

## 22 இருளானது அன்றி இலது, எவையும் ஏகப் பொருளாகி நிற்கும் பொருள்

**பதவுரை**

| | |
|---|---|
| எவையும் | — உலகிலுள்ள பலவகைப்பொருள்களையும் |
| ஏகப்பொருளாகி | — அவற்றின் வேறுபாடு தோன்றாமல் ஒரே பொருளாக |
| நிற்கும் பொருள் | — தோன்றச் செய்யும் பொருள் |
| இருளானதன்றி இலது | — இருளைத் தவிர வேறு பொருள் இல்லை |

**தெளிவுரை**

புற இருளானது உலகிலுள்ள எல்லாப் பொருள்களையும் மறைப்பது போல, அக இருளாகிய ஆணவம் எல்லா உயிர்களின் அறிவையும் மறைக்கின்றது.

## 23 ஒரு பொருள் காட்டாது இருள் உருவம் காட்டும் இரு பொருளும் காட்டாது இது

**பதவுரை**

| | |
|---|---|
| இருள் | — புற இருளானது |

| | |
|---|---|
| ஒரு பொருளும் காட்டாது | — உலகிலுள்ள மற்ற பொருள்களைக் காட்டாது மறைத்தாலும் |
| உருவம் காட்டும் | — தன்னைக் காட்டும் |
| இது | — இந்த ஆணவ மலமோ |
| இரு பொருளும் காட்டாது | — தன்னையும் காட்டாது தலைவனையும் (இறைவனையும்) காட்டாது |

**தெளிவுரை :**

புற இருள் உலகிலுள்ள பிற பொருள்களை மறைத்தாலும் தன்னுடைய இருப்பைக் காட்டும். ஆனல் அக இருளாகிய ஆணவம் இறைவனை உணராவண்ணம் உயிரறிவை மறைப்பதுடன் தன்னையும் காட்டாது.

எனவே ஆணவத்தை இருளைவிடக் கொடியது என்பர். ஏனென்றால் இருள் தன் இருப்பைப் புலப்படுத்துவதால் அதைப் போக்க விளக்கின் துணையை நாடுவர் மக்கள். ஆனல் ஆணவமோ தன் இருப்பையும் புலப்படுத்தாது. ஆதலால் மக்கள் அதிலிருந்து நீங்க முயற்சிப்பதில்லை.

24 அன்று அளவி உள்ளொளியோடு ஆவி இடை அடங்கி
இன்று அளவும் நின்றது இருள்.

**பதவுரை**

| | |
|---|---|
| அன்று அளவி | — அநாதிகாலந்தொட்டு |
| உள்ளொளியோடு | — இறைவனோடு |
| ஆவியிடை | — உயிர்களிடத்து |
| இருள் அடங்கி | — ஆணவமலமும் பொருந்தி |
| இன்றளவும் | — இன்று வரை |
| நின்றது | — நீங்காது நிற்பதாகும் |

**தெளிவுரை**

அநாதி காலம் தொட்டு உயிர்களிடத்து இறைவனும் உள்ளான். ஆணவமலமும் உள்ளது. ஆனல் ஆணவமலம் இறைவனைப் பற்ருமல் உயிரை மட்டும் பற்றி இன்று வரை உயிரை விட்டு நீங்காது உள்ளது.

25 பல்ரைப் புணர்ந்தும் இருட்பாவைக்கு உண்டு என்றும்
கணவர்க்கும் தோன்ருத கற்பு.

பதவுரை

| | |
|---|---|
| பலரைப் புணர்ந்தும் | — எண்ணற்ற உயிர்களைப் பிணித்திருந்தாலும் |
| இருட்பாவைக்கு | — இருட்பாவை என்று சொல்லப்படுகின்ற ஆணவத்திற்கு |
| கணவர்க்கு | — தான் பிணித்துள்ள உயிர்கட்கும் |
| தோன்றாத கற்பு | — தோன்றாத தன்மை (கற்பு-தன்மை) |
| என்றும் உண்டு | — திருவருள் பெறும்வரை உளதாகும் |

தெளிவுரை

ஆணவம் எல்லா உயிர்களையும் பிணித்துள்ளது. உயிர்கள் திருவருளைப் பெறும்வரை அதனை உணர்வதில்லை.

## 26 பன்மொழிகள் என்? உணரும் பான்மை தெரியாத தன்மை இருளார் தந்தது.

பதவுரை

| | |
|---|---|
| பன்மொழிகள் என் | — பலபல வார்த்தைகளால் விவரிப்பது என்னே! |
| உணரும் பான்மை | — அறிவுப் பொருளாகிய உயிர்கட்கு |
| தெரியாத தன்மை | — அறியாமையை |
| இருளார் தந்தது | — இருள் மலமாகிய ஆணவமே விளைவித்தது |

தெளிவுரை

அறிவுப் பொருளாகிய உயிர்கட்கு அறியாமையை உண்டு பண்ணுவது ஆணவமலமே ஆகும்.

## 27 இருள் இன்றேல் துன்பு என்? உயிர் இயல்பேல் போக்கும் பொருள் உண்டேல் ஒன்றாகிப் போம்.

பதவுரை

| | |
|---|---|
| இருள் இன்றேல் | — அக இருளாகிய ஆணவமலம் இல்லாவிடில் |
| துன்பு என் | — உயிர்கட்குத் துன்பம் ஏது (இல்லை) |
| உயிர் இயல்பேல் | — ஆணவம் உயிர்களின் இயல்பு என்று கூறப்பட்டால் |

போக்கும் பொருள் உண்டேல் — இருளைப் போக்கும் பொருள் உண்டாயின்

ஒன்ருகிப் போம் — இருளாகிய குணம் அழியும் போது குணியாகிய உயிரும் அழிந்து விடுமே

**தெளிவுரை**

உயிர்கட்குப் பிறவித் துன்பம் ஆணவமலத்தால் வந்தது. ஆணவம் உயிர்களின் குணமாயின், சிவஞானம் அதனை அழிக்கும் போது, குணியாகிய உயிரும் அழிந்துபடும். ஆனால் உயிர் அழியாத நித்தப் பொருள். எனவே ஆணவம் உயிரின் குணமன்று ; குற்றம் என்று கருதப்படும்.

## 28 ஆசு ஆதியேல் அணைவ காரணம்என்? முத்தி நிலை பேசாது அகவும் பிணி.

**பதவுரை**

ஆசு — (ஆசு-குற்றம்) உயிரின் குற்றமான ஆணவமலம்

ஆதியேல் — ஒரு காலத்தில் தோன்றியது என்று கூறினல் (ஆதி-தோற்றம்)

அணைவ காரணம் என் — அஃது உயிரை வந்து பற்றியதற்கு என்ன காரணம்? (ஒரு காரணமுமின்றி பற்றியது என்று கூறினல்)

முக்தி நிலை — முக்திக் காலத்திலும்

பேசாது — காரணமின்றி

பிணி அகவும் — பிணிப்பு உண்டாகும் (அகவும்-அமுக்கும்)

**தெளிவுரை**

உயிரின் குற்றமாகக் கருதப்படும் ஆணவம் ஒரு காலத்தில் தோன்றி உயிரை வந்து பற்றியது என்று கூறினல் அவ்வாறு பற்றியதற்குக் காரணம் என்ன என்ற கேள்வி எழும். காரணம் கூற இயலாது. ஒரு காரணமுமின்றி பற்றியது என்று கூறினல் முக்திக் காலத்திலும் காரணமின்றி வந்து பற்றலாமே என்று கூற நேரிடும்.

எனவே ஆணவமலம் இடையில் வந்து உயிரைக் கூடியதன்று, உயிரை அநாதியாகவே ஆணவமலம் பற்றியுள்ளது என்பர்.

29 ஒன்று மிகினும் ஒளி கவராதேல் உள்ளம்
என்றும் அகலாது இருள்.

**பதவுரை**

ஒன்று மிகினும் — ஆணவமல மறைப்பு மிகுந்தாலும்
ஒளி கவராதேல் — (உயிரானது) திருவருளைப் பற்றிக் கொள்ளாவிடில்
உள்ளம் — உயிரை விட்டு
இருள் — ஆணவமலம்
என்றும் அகலாது — என்றும் நீங்காது

**தெளிவுரை**

உயிர்களிடத்து ஆணவமாகிய இருளும், திருவருளாகிய ஒளியும் உள்ளன. ஆணவம் மிகுந்தாலும் உயிர் திருவருளைப் பற்றிக் கொள்ளாவிடில், உயிரை விட்டு ஆணவம் எக்காலத்தும் நீங்காது.

30 விடிவாம் அளவும் விளக்கு அனைய மாயை
வடிவு ஆதி கன்மத்து வந்து.

**பதவுரை**

விடிவாம் அளவும் — விடியும் வரை (இருட்டைப் போக்க)
விளக்கு அனைய — விளக்கு உதவுவது போல (உயிர்கள் திருவருளைப் பெறும் வரை)
மாயை — மாயா மலத்தின் காரியங்கள்
வடிவு ஆதி — தனு, கரண, புவன போகங்களாக
கன்மத்து — உயிர்கள் செய்யும் கன்மத்திற்கேற்ப
வந்து — வந்து உதவும்

(தனு - உடம்பு; கரணம் - கருவிகள்; புவனம் - உலகம்; போகம் - இன்ப துன்ப நுகர்வு)

**தெளிவுரை**

சூரிய ஒளி தோன்றும் வரை புற இருளை நீக்க விளக்கொளி உதவுவது போல, உயிர்களிடத்துத் திருவருள் பிரகாசிக்கும் வரை, அவற்றின் அகஇருளை நீக்க மாயையும், கன்மமும் விளக்குப் போல நின்று உதவும்.

## 4. அருளது நிலை

31 அருளில் பெரியது அகிலத்தில் வேண்டும்
பொருளில் தலையிலது போல்.

**பதவுரை**

| | |
|---|---|
| அகிலத்தில் | — உலகத்தில் |
| வேண்டும் பொருளில் | — ஒருவன் விரும்பி வேண்டும் பொருள்களுள் |
| தலை அருளிற்போல் | — தலையான அருட்செல்வத்தைப் போல |
| பெரியது இலது | — பெரிய பொருள் எதுவும் இல்லை |

**தெளிவுரை :**

இவ்வுலகில் ஒருவன் விரும்புகின்ற செல்வங்கள் பல திறத்தன. அவற்றுள் அருள் செல்வத்தைப் போல மேலான செல்வம் எதுவுமில்லை. அருட்செல்வம் இருந்தால் பிற செல்வங்கள் எல்லாம் தானே வரும் என்பது குறிப்பு.

## 32 பெருக்க நுகர்வினை பேரொளியாய் எங்கும்
## அருக்கன் என நிற்கும் அருள்

**பதவுரை**

| | |
|---|---|
| பெருக்க | — உலக மக்கள் செல்வத்தைப் பெருக்கவும் |
| நுகர்வினை | — அவற்றை நுகரவும் |
| நிற்கும் அருக்கன் என | — துணையாய் விளங்கும் சூரியனைப் போல (அருக்கன்-சூரியன்) |
| அருள் | — திருவருளானது (உயிர்கள் செயலாற்றவும் செயல்கட்கு ஏற்ற பயனை அநுபவிக்கவும்) |
| பேரொளியாய் | — மிகுந்த பிரகாசமாய் |
| எங்கும் நிற்கும் | — எவ்விடத்தும் நிறைந்து நிற்கும் |

**தெளிவுரை :**

உலக மக்கள் பொருள் ஈட்டி, பெருக்கி, நுகர, சூரியன் துணை நிற்பது போல, திருவருள் உயிர்கள் செயலாற்றவும், அச்செயல்கட்கேற்ற பயனை அனுபவிக்கவும் துணையாய் மிகுந்த ஒளியுடன் எங்கும் நீக்கமற நிறைந்து நிற்கும்.

## 33 ஊன் அறியாது என்றும் உயிர் அறியாது
## ஒன்றும் இவை
## தான் அறியாது ஆர் அறிவார் தாம்.

**பதவுரை**

| | |
|---|---|
| ஊன் அறியாது என்றும் | — உடம்பு எப்போதும் எதையும் அறியாது |

| | | |
|---|---|---|
| உயிர் ஒன்றும் அறியாது | — | உயிர்கள் தாமாய் எதையும் அறிய மாட்டா |
| இவை தான் அறியாது | — | அருளானது இவற்றை அறிந்து அறிவிக்காவிடில் |
| ஆர் அறிவார் தாம் | — | யார் தாம் அறிவினைப் பெறுவர் |

**தெளிவுரை**

உடம்பு சடம் எதையும் அறியாது. உயிர்கள் அறிவுப் பொருள் ஆயினும் தாமாக எதையும் அறிய மாட்டா. உடம்பிலுள்ள கருவிகளின் துணை கொண்டு அறியும். மேலும் இறைவன் அறிவிக்க அறியும். திருவருளே உயிர்கட்கு அறிவித்தும், அறிந்தும் உதவி செய்கிறது என்பது கருத்து.

## 34 பால் ஆழி மீன் ஆளும் பான்மைத்து அருள் உயிர்கள்
## மால் ஆழி ஆளும் மறித்து.

**பதவுரை**

| | | |
|---|---|---|
| பால் ஆழிமீன் | — | (ஆழி-கடல்) பாற்கடலில் வாழ்கின்ற மீன் |
| ஆளும் தன்மைத்து | — | அப்பாலைப் பருகாமல் அதிலுள்ள புழு பூச்சிகளை உண்பது போல |
| அருள் உயிர்கள் | — | அருளையே இடமாகக் கொண்ட உயிர்கள் |
| மால் ஆழி | — | மயக்கத்தைத் தரும் பிறவியாகிய கடலில் |
| மறித்து ஆழும் | — | மீண்டும் மீண்டும் அழுந்தும் |

**தெளிவுரை**

பாற்கடலில் வாழும் மீன்கள் அதிலுள்ள பாலைப் பருகாமல் பழக்கம் காரணமாக அங்குள்ள புழு பூச்சிகளையே பிடித்து உண்ணுவது போல, அருளையே இடமாக வாழும் உயிர்கள் அவ்வருளை உணர்ந்து அனுபவித்து இன்புறுமல், மாயா காரியமான மயக்கத்தைத் தரும் பிறவிக்கடலிலேயே மீண்டும், மீண்டும் அழுந்தித் துன்புறுகின்றன.

## 35 அணுகுதுணை அறியா ஆற்ருேனில் ஐந்தின் உணர்வை உணரா உயிர்.

**பதவுரை :**

| | | |
|---|---|---|
| அணுகு துணை | — | தனக்கு நெருங்கிய துணையாக வருசிறவனை |
| அறியா ஆற்ருேனில் | - | அறியாத வழிப்போக்கனைப் போலவும் |

ஐந்தின் — தம்மைச் செலுத்தும் ஆன்மாவை அறியாத ஐம்பொறிகளைப் போலவும்
உயிர் - உயிரானது
உணர்வை உணரா — தம் உணர்விற்குத் துணையாக உள்ள இறைவனை உணராது

**தெளிவுரை**

தனக்குத் துணையாக வருகிறவனை அறியாத வழிப்போக்கனைப் போலவும், தன்னைத் தொழிற்படும்படிச் செய்கின்ற உயிரை அறியாத ஐம்பொறிகளைப் போலவும், உயிரானது தனக்குத் துணையாய் தன்னுள்ளிருந்து செலுத்துகிற இறைவனை அறிவதில்லை.

*36 தரையை அறியாது தாமே திரிவார்*
*புரையை உணரா புவி.*

**பதவுரை**

தரையை அறியாது — தமக்கு ஆதாரம் தரை என்பதை அறியாது
தாமே திரிவார் — தாமே தமக்கு ஆதாரம் எனத் திரிவார்
(அது போல)
புவி — இப்பூமியிலுள்ள உயிர்கள்
புரையை உணரா — தமக்கு ஆதாரமாக உள்ள திருவருளை உணரா

**தெளிவுரை**

நடப்பதற்கு நம் கால்களே காரணம் என்றெண்ணி அக்கால்களைத் தாங்கி நிற்கும் ஆதாரமான தரையை மறந்து திரிபவர்களைப் போன்று, உயிர்கள் தமக்கு ஆதாரமாக உள்ள திருவருளை உணராது எல்லாம் தம் செயல் என்றெண்ணித், திரிகின்றன.

*37 மலைகெடுத்தோர் மண்கெடுத்தோர்*
*வான்கெடுத்தோர் ஞானம்*
*தலைகெடுத்தோர் தற்கேடர் தாம்.*

**பதவுரை**

மலை கெடுத்தோர் — உயர்ந்த மலை எதிரே இருக்கவும் அதனைக் காணாதவர் போல
மண் கெடுத்தோர் — பரந்த பூமி கீழே இருக்கவும் அதைக் காணாதவர் போல

| | |
|---|---|
| வான் கெடுத்தோர் | — அகன்ற ஆகாயம் மேலே விளங்க அதனைக் காணாதவர் போல |
| ஞானம் தலை கெடுத்தோர் | — சிவஞானமாகிய அருளை அறியாதார் |
| தற்கேடர் தாம் | — (இரு பொருள்) 1. தன்னையே தொலைத்துவிட்டுத் தேடும் பித்தராவர் 2. தமக்குத் தாமே கேட்டை விளைவித்துக் கொள்வர் |

**தெளிவுரை :**

மலை, மண், வான் ஆகியவற்றைத் தேடிக் காணாதவர் போல, தனக்குள்ளேயே இருக்கும் திருவருளை மறந்து அதனை எங்கே என்று தேடுபவர்கள் தம்மையே தொலைத்து விட்டுத் தேடும் பித்தர்களாக விளங்குவதுடன் தமக்கே கேட்டையும் விளைவித்துக் கொள்வர்.

38 வெள்ளத்துள் நாவற்றி எங்கும் விடிந்து இருளாம்
கள்ளத் தலைவர் கடன்.

**பதவுரை**

| | |
|---|---|
| கள்ளத் தலைவர் | — உண்மைத் தலைவனும் இறைவனை மறந்து தம்மையே தலைவர்களாகக் கருதும் உயிர்களின் |
| கடன் | — தன்மை |
| வெள்ளத்துள் நாவற்றி | — நிறைந்த நீர் இருந்தும் நா வறட்சியால் தவிப்பது போன்றது |
| எங்கும் விடிந்து | — விடிந்த பின்னும் |
| இருளாம் | — இருளாய் இருப்பது போன்றது |

**தெளிவுரை**

திருவருளை அறியாத உயிர்களின் தன்மையானது எங்கும் நல்லநீர் நிறைந்திருந்தும் அதனைப் பருகி வேட்கை தணியாது நாவறட்சியுற்று நிற்பதைப் போன்றது. விடிந்து நாற்றிசையும் சூரியஒளிப் பிரகாசமாய் இருந்தும் கண்ணை மூடிக் கொள்பவனுக்கு இருளாய் இருப்பது போன்றதுமாகும்.

39 பரப்பு அமைந்து கேண்மின்! இது பாற்கலன்மேல் பூனை
கரப்பு அருந்த நாடும் கடன்.

**பதவுரை**

| | | |
|---|---|---|
| இது | — | திருவருளை அறியாத உயிர்களின் தன்மையானது |
| பாற்கலன் மேல் | — | பால் நிறைந்து குடத்தின் மேலிருக்கும் |
| பூனை | — | பூனையானது |
| கரப்பு அருந்த | — | கரப்பான் பூச்சியைப் பிடிக்க |
| நாடும் கடன் | — | ஓடும் தன்மையை ஒத்தது |
| பரப்பு அமைந்து | — | உலக விசயங்களை நோக்கி ஓடாது அடங்கி |
| கேண்மின் | — | குரு கூறும் உபதேசநெறி கேட்டு அருள்வழி நில்லுங்கள் |

**தெளிவுரை**

பாற்பாத்திரத்தின் மேல் அமர்ந்திருக்கும் பூனையானது அப்பாத்திரத்திலுள்ய பாலைப் பருகாது சுவரில் ஓடும் கரப்பான் பூச்சியைப் பிடிக்கத் தாவுவது போல திருவருளையே தாரகமாகக் கொண்டுள்ள உயிர்கள் அத்திருவருளை உணர்ந்து உய்யாமல் உலகியல் இன்பம் நோக்கி ஓடுகின்றன.

## 40 இற்றைவரை இனயந்தும் ஏதும் பழக்கம் இல்லா வெற்றுயிர்க்கு வீடு மிகை.

**பதவுரை**

| | | |
|---|---|---|
| இற்றைவரை | — | அநாதி முதல் இன்று வரை |
| இயைந்தும் | — | திருவருளோடு கலந்து நின்றும் |
| ஏதும் பழக்கம் இல்லா | — | சிறிதும் உணராத |
| வெற்றுயிர்க்கு | — | பயனடையாத உயிர்கட்கு |
| வீடு | - | வீடு பேறானது |
| மிகை | — | அடைய இயலாதது |

**தெளிவுரை**

உயிர்கள் தன்னோடு என்றும் கலந்துள்ள திருவருளை உணர்ந்து பயன் பெறுவிடில் வீடுபேற்றினை அடைய முடியாது திருவருளைச் சிந்தையில் இடையறுது நினைத்து, அருள் ஒழுகுதலே வீடுபேறு அடைதற்குரிய வழி என்பது குறிப்பு.

# 5. அருள் உரு நிலை

## 41 அறியாமை உள்நின்று அளித்ததே காணும் குறியாகி நீங்காத கோ.

**பதவுரை**

நீங்காத கோ — உயிரை விட்டு நீங்காத இறைவனே
அறியாமை — (பக்குவமடையாத உயிர்கட்கு) தோன்ருது
உள்நின்று அளித்ததே — உயிர்க்குள் உயிராய் நின்று காத்து நடத்தி (உயிர்கள் பக்குவமடைந்த காலத்து)
காணும் குறியாகி — அநுக்கிரகம் செய்ய காணக்கூடிய குருவடிவில் வந்தது

**தெளிவுரை**

உயிரை விட்டு நீங்காத இறைவன் பக்குவமடையாத உயிர்கட்குத் தோன்ருமல் மறைந்திருந்து உள்நின்று காப்பான். உயிர்கள் பக்குவம் பெற்ற காலத்து காணக்கூடிய குருவடிவில் வருவான்.

உயிர்கட்குக் குருவாக வருவது இறைவனே ஆவான் என்பது கருத்து.

## 42 அகத்து உறுநோய்க்கு உள்ளினர் அன்றி அதனைச் சகத்தவரும் காண்பரோ தாம்.

**பதவுரை**

அகத்து உறு நோய்க்கு — வீட்டிலுள்ள ஒருவனுக்கு நோய் வந்தால்
உள்ளினர் அன்றி — அவ்வீட்டில் உள்ளவர்களே அறிவார்களே அல்லாமல்
அதனை — அந்த நோயைச்
சகத்தவரும் — உலகிலுள்ள பிறரும்
காண்பரோ தாம் — அறிய மாட்டார்கள்

**தெளிவுரை :**

வீட்டிலுள்ள ஒருவனுக்கு நோய் வந்தால் அந்நோயை வீட்டிலுள்ளவர் தவிர பிறர் அறியார். அதுபோல உயிர்களிடத்து ஆணவமும் உள்ளது. இறைவனும் உள்ளான். உயிர்களின் உள்ளேயுள்ள ஆணவமாகிய நோயை, உயிர்க்குள் உயிராயுள்ள இறைவன் தான் அறிந்து குணப்படுத்த முடியும். எனவே இறைவனே குருவாக வருகின்ருன் என்பர்.

## 43 அருளா வகையால் அருள்புரிய வந்த பொருள் ஆர் அறிவார் புவி.

**பதவுரை**

அருளர் வக்கயால் — உயிர்கட்கு அருள் செய்ய வேண்டும் என்று நினைந்த மாத்திரத்தில்

அருள் புரிய வந்த பொருள் — அருள்புரிய மானுடவடிவில் குருவாக வந்தது இறைவன் என்பதை

புவி ஆர் அறிவார் — பூமியிலுள்ள மக்களில் யார் அறிவார் ஒருவருமில்லை

**தெளிவுரை**

உயிர்கட்கு அருள்புரிய நினைத்த இறைவன் வெளிப்பட்டு அருளாமல், மானுடச்சட்டை தாங்கி குரு வடிவில் வந்து அருள்கின்றான். அவ்வாறு குருவாக வந்தது இறைவன் என்பதை உலகோர் அறியார்.

44 பொய் இருண்ட சிந்தைப் பொறியிலார் போதமாம்
மெய் இரண்டும் காணார் மிக.

**பதவுரை**

பொய் — தன் உண்மையைப் புலப்படுத்தாத ஆணவத்தால்

இருண்ட சிந்தை — அஞ்ஞானமுடையவர்களாகி

பொறியிலார் — மெய்யுணர்வு பெறாதவர்கள்

போதமாம் — திருவருளையும்

மெய் இரண்டும் — அவ்வருள் அதிட்டித்து நிற்கும் குரு வடிவத்தையும்

காணார் மிக — சிறிதும் அறியமாட்டார்

**தெளிவுரை**

ஆணவத்தால் அறியாமையுடையவர்களாய் மெய்யுணர்வு பெறாத உயிர்கள், திருவருளையும், அவ்வருளே குருவாக வந்ததையும் அறியார்.

45 பார்வை என நோக்கார் முன் பற்றிப் பிடித்தற்காம்
போர்வை எனக் காணார் புவி.

**பதவுரை**

பார்வை என — அந்தந்த இனத்தில் பழக்கப்பட்ட விலங்குகளைக் காட்டி (இதனைப் பார்வை விலங்கு என்பர்)

| | |
|---|---|
| மாக்களை | — ஏனைய வன விலங்குகளை |
| முன்பற்றிப் பிடித்தற்காம் | — வசப்படுத்திப் பிடிப்பர் |
| போர்வை என | — மானுடச்சட்டை இறைவன் போர்த்திக் கொண்ட போர்வை என |
| புவி காணார் | — இப்பூவுலகத்தோர் அறியார் |

தெளிவுரை

வேட்டுவர்கள் பார்வை விலங்கைக் காட்டி ஏனை விலங்குகளை வசப்படுத்திப் பிடிப்பர். அதுபோல உயிர்களைத் தன்வசப்படுத்தி ஆட்கொள்ளுதற் பொருட்டு இறைவன் மானுடச்சட்டை தாங்கி வருகின்றான் என்பதை உலகோர் அறியார்.

46 எமக்கு என் எவனுக்கு எவை தெரியும் அவ்வ
தமக்கு அவனை வேண்டத் தவிர்.

பதவுரை

| | |
|---|---|
| எவனுக்கு | — எந்த மனிதனுக்குத் தான் |
| எவை தெரியும் | — குருவின் துணையின்றி ஞான நூல் உண்மை விளங்கும்? (ஒன்றும் விளங்காது) |
| அவ்வத்தமக்கு | — ஞான நூற்பொருளை விளக்க |
| அவனை வேண்ட | — குரு வேண்டுமாதலால் |
| எமக்கு என் | — குருவினால் எமக்கு என்ன பயன் என்று கேட்பதை |
| தவிர் | — தவிர்ப்பாயாக |

தெளிவுரை :

குருவின் துணையின்றி ஞானநூல் உண்மை ஒருவருக்கும் விளங்காது. எனவே ஞானநூற் பொருளை விளக்க குரு அவசியம்.

47 விடம் நகுலம் மேவினும் மெய்ப்பாவகனின் மீறும்
கடனில் இருள் போவது இவன் கண்.

பதவுரை

| | |
|---|---|
| விடம் | — பாம்பு கடித்த விடம் |
| நகுலம் | — கீரி |
| மேவினும் | — வந்து தீண்டினாலும் தீராது |
| மெய்ப்பாவகனின் | — அதன் வடிவைப் பாவிக்கும் மந்திரிகனால் |
| மீறும் கடனில் | — தீர்வது போல |

இவன் கண் — குருவின் அருள் நோக்கால்
இருள் போவது — ஆணவமலம் நீங்கும்

**தெளிவுரை**

ஒருவனைப் பாம்பு கடித்த விடம், அதற்குப் பகையாகிய கீரி வந்து தொட்டாலும் நீங்காது. ஆனால் மாந்திரிகனால் விடம் நீங்கும். அது போல குருவின் அருள் பார்வை மாணவனின் ஆணவமலத்தை நீக்கும்.

## 48 அகலர்த் தரும்அருளை ஆக்கும்வினை நீக்கும்
## சகலர்க்கு வந்தருளும் தான்.

**பதவுரை**

அகலர்த் தரும் — ஒரு மலமுடைய விஞ்ஞானகலர்க்கு உள் நின்று ஞானம் உணர்த்துவான்

அகலர்க்கு அருளை ஆக்கும் — இரு மலமுடைய பிரளயா கலருக்கு முன்னின்று அருளுவான்

வினை நீக்கும் சகலர்க்கு — வினை நீங்கும் பக்குவமுடைய சகலர்க்கு

வந்தருளும் தான் — இறைவன் குருவாக வந்தருளுவான்

**தெளிவுரை**

இப்பாடல் இறைவன் மூவகை உயிர்கட்கும் அருள் செய்யும் முறையை உணர்த்துகின்றது. விஞ்ஞானகலர்க்கு இறைவன் உள்நின்று அருளுவான். பிரளயாகலர்க்கு முன்தோன்றி அருளுவான். சகலர்க்குக் குருவாக வந்து அருளுவான்.

## 49 ஆர் அறிவார் எல்லாம் அகன்ற நெறி அருளும்
## பேரறிவான் வாராத பின்.

**பதவுரை**

அருளும் பேரறிவான் — உயிர்கட்கு அருள் புரிகின்ற முற்றுணர்வுடைய இறைவன்

வாராதபின் — குருவாக வராவிடில்

எல்லாம் அகன்ற நெறி — பாசம் நீங்கி முக்தி நெறி

ஆர் அறிவார் — யார்தாம் அறிய முடியும்

**தெளிவுரை**

முற்றுணர்வுடைய இறைவன் குருவாக வந்து உயிர்கட்கு அருள் புரியாவிடில், அவை பாசத்திலிருந்து விடுபட்டு முக்தி நெறி அடையும் வழியை அறியா.

50 ஞானம் இவன் ஒழிய நண்ணியிடும் நற்கல் அனல்
பானு ஒழியப் படின்.

**பதவுரை**

நற்கல் — சூரிய காந்தக்கல்
பானு ஒழிய — சூரியஒளி இல்லாமல்
அனல் படின் — அக்கினியை உண்டாக்குமாயின்
இவன் ஒழிய — அருட்குரு இல்லாமல்
ஞானம் நண்ணியிடும் — உயிர்களிடத்து சிவஞானம் உண்டாகும்

**தெளிவுரை**

சூரியஒளி இல்லாமல் சூரிய காந்தக் கல்லில் நெருப்புத் தோன்றுமாயின், அருட்குரு இல்லாமல் உயிர்களிடத்து சிவ-ஞானம் தோன்றும். சூரியஒளி இல்லாமல் சூரிய காந்தக் கல்லில் நெருப்புத் தோன்ருது. அது போல் ஞானகுரு இன்றி உயிர்-களிடத்து ஞானம் உண்டாகாது என்பது குறிப்பு. உயிர்கள் ஞானம் பெற குருவின் இன்றியமையாமையை இப்பாடல் உணர்த்துகின்றது.

## 6. அறியும் நெறி

51 நீடும் இருவினைகள் நேராக நேராதல்
கூடும் இறை சக்தி கொளல்.

**பதவுரை**

நீடும் — நீடித்து வளர்கின்ற
இருவினைகள் — நல்வினை, தீவினைகள்
நேராக நேராதல் — அவற்றின் பலன்களான இன்பமும் துன்பமும் சமமாகக் கருதப்பட்டால்
இறைசக்தி கொளல் கூடும் — இறைவனுடைய திருவருள் பதியும்

**தெளிவுரை**

உயிர்கள் நல்வினை, தீவினை இவற்ருல் உண்டாகும் இன்ப துன்பங்களைச் சமமாகக் கருதும் பக்குவம் பெற்ருல் அத்தகைய உயிர்களிடத்து திருவருட்சக்தி பதியும். அதனைச் சத்திநிபாதம் என்பர்.

சத்தி—திருவருள், நிபாதம்—வீழ்தல், பதிதல்

52 ஏகன் அநேகன் இருள் கன்மம் மாயை இரண்டு
ஆக இவை ஆறு ஆதி இல்.

**பதவுரை**

| | |
|---|---|
| ஏகன் | — ஒன்றாகிய இறைவன் |
| அநேகன் | — பலவாகிய உயிர்கள் |
| இருள் | — ஆணவம் |
| கன்மம் | — கன்மம் (வினை) |
| மாயை இரண்டு | — சுத்த மாயை, அசுத்த மாயை |
| ஆக இவை ஆறு | — முற்கூறிய ஆறு பொருட்களும் |
| ஆதி இல் | — அநாதியானவை |

**தெளிவுரை**

இறைவன், உயிர்கள், ஆணவம், கன்மம், சுத்த மாயை அசுத்த மாயை இவை ஆறும் அநாதியானவை.

*53 செய்வானும் செய்வினையும் சேர்பயனும் சேர்ப்பவனும்*
*உய்வான் உளன் என்று உணர்.*

**பதவுரை**

| | |
|---|---|
| செய்வானும் | — வினைகளைச் செய்யும் உயிர்களும் |
| செய்வினையும் | — செய்யப்படும் நல்வினை, தீவினைகளும் |
| சேர்பயனும் | — அதன் பலன்களான இன்பமும், துன்பமும் |
| சேர்ப்பவனும் | — வினைப்பலன்களை அவ்வுயிர்கட்குச் சேர்ப்பிக்கின்ற இறைவனும் |
| உய்வான் | — நீ உய்யும் பொருட்டு |
| உளன் என்று உணர் | — இந்நால்வகைப் பொருட்களும் உண்டு என்பதை உணர்வாயாக |

**தெளிவுரை**

வினை செய்கின்ற உயிரும், செய்யப்படும் நல்வினை தீவினைகளும், அதனால் உண்டாகும் பயன்களான இன்ப துன்பமும், அப்பயன்களைச் செய்த உயிர்கட்கே சேர்ப்பிக்கின்ற இறைவனும் உண்டு என்பதை ஒருவன் உணர்ந்தால் அவன் உய்தி பெறுவான்.

*54 ஊன் உயிரால் வாழும் ஒருமைத்தே ஊனோடு உயிர்*
*தான் உணர்வோடு ஒன்றும் தரம்.*

**பதவுரை**

| | |
|---|---|
| ஊன் | — உடம்பு |
| உயிரால் வாழும் ஒருமைத்தே | — உயிரால் வாழ்வது போல |

| | |
|---|---|
| ஊனேடு உயிர் தான் | — உடம்பிலுள்ள உயிர் தான் |
| உணர்வோடு | — திருவருளோடு |
| ஒன்றும் தரம் | — ஒன்று பட்டு நிற்கும் |

**தெளிவுரை**

உடம்போடு உயிர் ஒன்றுபட்டு நிற்பது போல, உயிரோடு இறைவன் ஒன்றுபட்டு நிற்பன். உயிரில்லையாயின் உடம்பு செயலற்றுக் கிடப்பது போல, இறைவன் இல்லையாயின் உயிர் செயலற்று நிற்கும்.

## 55 தன்நிறமும் பல்நிறமும் தானும் கல் தன்னம் தரும் பொன்நிறம் போல் மன்நிறம் இப்பூ.

**பதவுரை :**

| | |
|---|---|
| தன்னிறமும் | — தன்னுடைய நிறத்தையும் |
| பல்நிறமும் | — தன்னைச் சார்ந்த பலநிற பொருட்களின் வண்ணத்தையும் |
| தானும் கல் தரும் | — படிகக்கல் பெறும்படித் தருகின்ற |
| பொன்னிறம் போல் | — பொன் போல் ஒளிர்கின்ற சூரிய பிரகாசத்தைப் போல் |
| மன் நிறம் | — திருவருட் பிரகாசத்தையுடையது |
| இப்பூ | — இப்பூவுலகம் |

**தெளிவுரை**

படிகக்கல்லானது தனது நிறத்தையும், தன்னைச் சார்ந்த பொருட்களின் நிறத்தையும் பெறுவதற்குச் சூரியஒளி காரணமானாற்போல் உயிர் தத்துவங்களில் கூடுவதற்கும், அவற்றிலிருந்து நீங்கி முக்தி அடைவதற்கும் காரணமாய் விளங்கும் இறைவனது திருவருள் இப்பூவுலகு முழுவதும் நிறைந்துள்ளது.

## 56 கண்டு ஒல்லை காணும் நெறி கண் உயிர் நாப்பண் நிலை உண்டு இல்லை அல்லது ஒளி.

**பதவுரை**

| | |
|---|---|
| கண்டு | — ஒரு பொருளைப் பார்த்து |
| ஒல்லை | — விரைவில் |
| காணும் நெறி | — அஃது இன்ன பொருள் என உணர்தல் |
| கண் உயிர் | — கண்ணிற்கும் உயிருக்கும் |

| | | |
|---|---|---|
| நாப்பண் நிலை | — | நடுவே |
| ஒளி உண்டு | — | ஒளி நிற்பதால் உண்டாகிறது |
| அல்லது இல்லை | — | ஒளி இல்லாவிடில் கண் காணுதல் இல்லை |

**தெளிவுரை**

புறஒளியால் கண் பொருளைக் காண உயிர் உதவுவது போல, திருவருள், உயிர் இறைவனை உணர உதவுகின்றது.

57 புன்செயலின் ஓடும் புலன்செயல்போல் நின்செயலை மன்செயலது ஆக மதி.

**பதவுரை**

| | | |
|---|---|---|
| புன்செயலின் | — | இழிந்த உலக விடயங்களில் |
| ஓடும் | — | செல்லுகின்ற |
| புலன்செயல்போல் | — | ஐம்பொறிகளின் செயல்களை உன்னுடைய செயல்களாகக் கருதுவது போல |
| நின் செயலை | — | நீ செய்யும் செயல்களை |
| மன் செயலாக | - | திருவருட்செயல்களாக |
| மதி | — | நீ கருதுவாயாக |

**தெளிவுரை**

ஐம்பொறிகளை உலக விடயங்களில் செலுத்துவது உயிர். எனவே அவற்றின் செயல் உயிரின் செயலாகக் கருதப்படும். அதுபோல உயிரின் செயல்கள் உயிர்க்கு முதலாகிய இறைவன் செயல் என்பதை நீ அறிவாயாக.

58 ஓராதே ஒன்றையும் உற்று உன்னுதே நீ முந்திப் பாராதே பார்த்ததனைப் பார்.

**பதவுரை**

| | | |
|---|---|---|
| ஓராதே | — | (இறைவனின் அருட் செயல்களை மிகுதியாக) ஆராய்ச்சி செய்யாதே |
| ஒன்றையும் | — | வேறு உலக விடயங்களை |
| உற்று உன்னுதே | — | மனத்தில் நினையாதே |
| நீ முந்திப் பாராதே | — | தன் முனைப்புடன் எதையும் காணுதே |
| பார்த்ததனைப் | — | உயிர்களின் செயல் இறைவன் செயல் என்று அறிந்ததை |
| பார் | — | அருள்வழி நின்று காண்பாயாக |

### தெளிவுரை

இறைவனின் அருட்செயல்களை உயிர்கள் தம் சிற்றறிவால் ஆராயாமலும், உலக விடயங்களில் பற்று வைக்காமலும், தான் என்ற தன் முனைப்போடு செயலாற்றாமல், அருள்வழியில் நின்றால் எல்லாம் இறைவன் செயல் என்பதை அவை உணரும்.

## 59 களியே மிகு புலனாக் கருதி ஞான
## ஒளியே ஒளியாய் ஒளி.

### பதவுரை

| | |
|---|---|
| களியே | — முற்கூறியவாறு அருள்வழியில் நிற்கும் போது உண்டாகும் மகிழ்ச்சியினையே |
| மிகு புலனாக் கருதி | — மேலான விடயமாக உணர்ந்து |
| ஞான ஒளியே ஒளியாய் | — திருவருள் ஒளியையே ஒளியாகக் கொண்டு |
| ஒளி | — அதனுள் அடங்கி நிற்பாயாக |

### தெளிவுரை

ஞானம் பெற்ற உயிர்கள் அருள்வழி நிற்பதால் உண்டாகும் மகிழ்ச்சியினையே நுகர்தற்குரிய மேலான விடயமாகக் கருதி, அத்திருவருள் ஒளியிலேயே தொடர்ந்து நிற்றல் வேண்டும்.

## 60 கண்டபடியே கண்டு காணாமை காணாமைக்
## கொண்டபடியே கொண்டு இரு.

### பதவுரை

| | |
|---|---|
| கண்டபடியே | — திருவருளே கண்ணுக்குப் புலப்படும் வண்ணம் குருவாக வந்துள்ளதை |
| கண்டு | — கண்டு |
| காணாமை | — அறியாமையை உண்டு பண்ணும் ஆணவம் |
| காணாமை | — தோன்றாமல் |
| கொண்டபடியே கொண்டு | — அருளையே தாரகமாகக் கொண்டு |
| இரு | — நிற்பாயாக |

### தெளிவுரை

திருவருளே கண்ணுக்குப் புலப்படும் வண்ணம் குருவாக வந்து ஞானம் உணர்த்தியதை உணர்ந்து அறியாமையிலிருந்து நீங்கி அருள்வழி ஒழுகுவாயாக!

## 7. உயிர் விளக்கம்

61 தூர்நிழல் ஆர்தற்கு ஆரும் சொல்லார் தொகும் இதுபோல்
தான் அதுவாய் நிற்கும் தரம்.

**பதவுரை**

(வெயிலின் கடுமையால் வருந்துபவனுக்கு)
தூநிழல் ஆர்தற்கு — குளிர்ச்சி பொருந்திய நிழலை அடையும்படி
ஆரும் சொல்லார் — யாரும் சொல்ல வேண்டியது இல்லை
இது போல் — இதைப் போன்று
தான் — உயிரானது
அதுவாய் நிற்கும் தரம் — திருவருள் வயப்பட்டு நிற்கும் தன்மை
தொகும் — அமையும்

**தெளிவுரை**

வெயிலின் கடுமையால் வருந்தும் வழிப்போக்கன் எதிரே குளிர்ச்சியான நிழல் தென்படும் போது அந்நிழலில் ஒதுங்குவான். அதுபோல மலங்களால் துன்புறும் ஒருவன் திருவருளைச் சார்ந்து இன்புறுவான்.

மலநீக்கத்திற்குத் திருவருளே துணை.

62 தித்திக்கும் பால் தானும் கைக்கும் திருந்திடும் நாம்
பித்தத்தில் தான் தவிர்ந்த பின்.

**பதவுரை**

(பித்த நோயுள்ளவர்கட்கு)
தித்திக்கும் — இனிய சுவையுடைய
பால் தானும் — பாலானது
கைக்கும் — கசக்கும்
பித்தத்தில் தான் — பித்த நோயிலிருந்து
தவிர்ந்த பின் — நீங்கிய பின்
நா — நாவிற்கு
திருந்திடும் — முன்பு கசந்த பால் இனிப்பாகத் தோன்றும்

**தெளிவுரை**

பித்த நோயுள்ளவன் பாலின் இன்சுவையை அறியான். அதுபோல ஆணவமல நோயால் பிணிக்கப்பட்டுள்ள உயிர்கள்

சிவப்பேரின்பத்தை அறியா. பித்த நோய் நீங்கியதும் வாலின் இன்சுவையை அறிவான். அதுபோல ஆணவமல நோய் தீர்ந்த முக்தி நிலையில் உயிர் சிவப்பேரின்பத்தை உணர்ந்து அனுபவிக்கும்.

63 காண்பான் ஒளி இருள்இல் காட்டிடவும் தான் கண்ட
வீண்பாவம் எந்நாள் விடும்.

**பதவுரை**

காண்பான் — காண்கின்ற உயிருக்கு
ஒளி — திருவருள்
இருள்இல் — ஆணவ இருளை இல்லையாம்படிப் போக்கி
காட்டிடவும் — சிவத்தைக் காட்டிடவும்
தான் கண்ட — (திருவருள் உதவியை மறந்து) தானே கண்டதாகக் கூறும்
வீண்பாவம் — வீணான பாவமானது
எந்நாள் — எப்பொழுது
விடும் — தீரும்

**தெளிவுரை**

திருவருளானது உயிர்களின் ஆணவ இருளைப் போக்கிச் சிவத்தைக் காட்டுகின்றது. திருவருளின் இவ்வுதவியை மறந்து தானே கண்டதாக உயிர் கருதுவது பெரும் பாவமாகும்.

64 ஒளியும் இருளும் ஒருமைத்துப் பன்மை
தெளிவு தெளியார் செயல்.

**பதவுரை**

ஒளியும் — ஒளியும்
இருளும் — இருளும்
பன்மை — பலவாகிய பொருட்களில்
ஒருமைத்து — தன்வகைப் பொருளைக் காட்டி ஒழிந்ததை மறைக்கும் தன்மையில் ஒத்திருக்கும்(அதுபோல)
தெளிவு செயல் — தெளிவுடையோர் அருளைக் காண்பர்
தெளியார் செயல் — தெளிவில்லாதார் இருளுடையோர் ஆவர்

**தெளிவுரை :**

தெளிவுடையோர் அருளுடன் கூடி நிற்பதால் அவர்கட்குப் பிரபஞ்சம் (உலகு) தோன்றாது. சிவமே தோன்றும்.

தெளிவற்றோர் இருளோடு கூடி நிற்பதால் அவர்கட்குச் சிவம் தோன்றாது. உலகே தோன்றும்.

## 65 கிடைக்கத் தகுமோ நற்கேண்மையார்க்கு அல்லால் எடுத்துச் சுமப்பானை இன்று.

**பதவுரை**

(கேண்மை-நட்பு, உறவு)

| | |
|---|---|
| நற்கேண்மையார்க்கு அல்லால் | — நல்ல நண்பர்களையோ உறவினர்களையோ உடையவர்கட்கு அல்லாமல் பிறருக்கு |
| எடுத்துச் சுமப்பானை | — தம் துன்பத்தைச் சுமந்து பகிர்ந்து கொள்பவனைப் |
| கிடைக்கத் தகுமோ | — பெற முடியுமோ? |
| இன்று | — முடியாது |

**தெளிவுரை**

ஒருவன் நல்ல நண்பர்களையோ, உறவினர்களையோ பெற்றிருந்தால் அவர்கள் அவனுடைய துன்பத்தைப் பகிர்ந்து சுமப்பர். அதுபோல உயிர்கள் இறைவனிடத்துப் பேரன்பு கொண்டால் அவன் அவ்வுயிர்களின் வினைகளையும், பலன்களையும் எடுத்துச் சுமப்பான்.

## 66 வஞ்சமுடன் ஒருவன் வைத்தநிதி கவரத் துஞ்சினனோ போயினனோ சொல்.

**பதவுரை**

| | |
|---|---|
| ஒருவன் வைத்த பொருளை | — செல்வந்தன் ஒருவன் வைத்த நிதியை |
| வஞ்சமுடன் கவர | — மற்றொருவன் வஞ்சனையாகக் கவர்ந்து செல்ல |
| துஞ்சினனோ | — பொருளுடையவன் தூங்கினனோ |
| போயினனோ | — அல்லது அவ்விடத்தை விட்டு நீங்கியிருந்தானோ |
| சொல் | — சொல்வாயாக |

**தெளிவுரை**

செல்வன் ஒருவன் வைத்துள்ள நிதியை அவனறியாமல் மற்றொருவன் கவர்வதற்கு, அச்செல்வன் சோர்ந்தனனோ? அன்றி

அவ்விடத்தை விட்டு நீங்கினனோ? என்பது இக்குறளின் வெளிப் பொருள். இங்குச் செல்வன் என்பது இறைவனைக் குறிக்கும். அவனது நிதி திருவருள். அவன் அத்திருவருளை விட்டு என்றும் பிரியாதவன் ஆதலால் அவனுதவியின்றி உயிர் அதனைப் பெற மாட்டாது.

## 67 தனக்கு நிழல் இன்று ஒளி கவரும் தம்பம்
## ஏனக் கவர நில்லாது இருள்.

**பதவுரை**

| | |
|---|---|
| தனக்கு | — தனக்கென்று |
| நிழல் இன்று | — நண்பகலில் நிழல் தோன்றமல் |
| ஒளி கவரும் | — சூரிய ஒளியால் கவர்ந்து கொள்ளப்பட்ட |
| தம்பம் என் | — பளிங்குத் தூண் போல |
| கவர | — சிவஞானம் உயிரறிவைப் பற்ற |
| இருள் நில்லா | — ஆணவமாகிய இருள் நில்லாது |

**தெளிவுரை :**

உச்சிக்கால சூரியஒளி படும்பொழுது பளிங்குத் தூண் நிழலின்றி ஒளிமயமாய் நிற்கும். அதுபோல சிவஞானம் உயிரைப் பற்றும் போது, ஆணவ இருள் நீங்கி உயிர் வியாபக அறிவுடன் திகழும்.

## 68 உற்கை தரும் பொற்கை உடையவர் போல் உண்மைப் பின்
## நிற்கை அருளார் நிலை

**பதவுரை**

| | |
|---|---|
| உற்கை தரும் | — கொள்ளிக்கட்டை ஏந்தியுள்ள |
| பொற்கை | — அழகிய கையை |
| உடையவர் போல | — உடையவர்கள் போல் |
| (தீப ஒளி முன்னுகவும் தாம் பின்னுகவும் நின்று பார்த்தல் போல) | |
| உண்மைப்பின் | — (சிவத்தைப் பார்க்கும் உயிர்கள்) திருவருளை முன்னிறுத்தித் தாம் பின் |
| அருளார் நிலை நிற்க | — அருளோடு பொருந்தி நிற்க |

**தெளிவுரை**

விளக்கை ஏந்திச் செல்பவன் தனக்கு முன்னே விளக்கைப் பிடிப்பானுயின் அவ்வொளியில் பொருளைக் காண்பான். அதுபோல

உயிர்கள் திருவருளை முன்னிறுத்தி, தான் என்ற அகந்தை அடங்கி நின்றால் சிவத்தைக் காணும்.

## 69 ஐம்புலனால் தாம் கண்டு அகன்றால் அது ஒழிய ஐம்புலன் ஆர் தாம்ஆர் அதற்கு.

**பதவுரை**

ஐம்புலனால் — ஐம்பொறிகளின் வாயிலாக
தாம் — உயிர்கள்
கண்டது — சிவத்தைக் கண்டது
அகன்றால் — அன்றாயின்
அது ஒழிய — அச்சிவமே தன்னைக் காட்டினால் அன்றி
ஐம்புலன் ஆர் — ஐம்புலன்கள் என்ன வலிமை உடையன
தாம் ஆர் — உயிர்கள் தாம் என்ன வல்லமை உடையன
அதற்கு — அச் சிவனை அறிதற்கு

**தெளிவிரை**

ஐம்பொறிகளின் வாயிலாக உயிர்கள் உலக விடயங்களை அறிகின்றன. ஐம்பொறிகள் முதலிய தத்துவங்கட்கு அப்பாற்பட்ட இறைவனை உயிர்கள் திருவருளின் துணையின்றி அறியும் வல்லமை உடையன அல்ல.

## 70 தாமே தரும் அவ்வரைத் தம் வலியினால் கருதல் ஆமே இவன் ஆர் அதற்கு.

**பதவுரை**

தாமே தரும் — தானே இரங்கி வந்து உயிர்கட்கு அருள்புரிகின்ற
அவரை — இறைவனை
தம் வலியினால் — தம் முயற்சியால்
கருதல் — பெற்றதாக நினைத்தல்
ஆமே — தகுமோ? தகாது ஆதலால்
இவன் ஆர் அதற்கு — திருவருளாலன்றி அப்பேரின்பத்தைப் பெற உயிர்கட்கு என்ன உரிமை உள்ளது

**தெளிவுரை**

இறைவன் தானே முன்வந்து உயிர்கட்கு அருள்புரியும் தன்மையுடையவன். அப்பேரருளாளனை உயிர்கள் தம் முயற்சி-

யினால் பெற்றதாக நினைத்தல் தகாது. அவ்வாறு நினைக்க உயிர்கட்குத் தகுதி இல்லை.

## 8. இன்புறு நிலை

71 இன்புறுவார் துன்புஆர் இருளின் எழுஞ்சுடரின்
பின்புகுவார் முன்புகுவார் பின்.

**பதவுரை**

துன்பு ஆர் — துன்பம் தரும்
இருளின் — ஆணவ இருளை
எழும் — நீக்க முயற்சிக்கின்ற
சுடரின் — திருவருளின்
பின் புகுவார் — பின்னே செல்பவர்கள்
முன் புகுவார் — முன்னே பற்றியுள்ள மும்மலங்களும் நீங்கப் பெற்றவர்களாய்
பின் — அதன் மேலும்
இன்புறுவார் — பேரின்பத்தை அடைவார்கள்
(பின்வருமாறு பொருள் கூறுவதும் உண்டு)
இருளின் எழும் — ஆணவ இருளை நீக்கும்
சுடரின் — திருவருளின்
பின் புகுவார் — பின்னே செல்பவர்கள்
இன்புறுவார் — இன்பம் பெறுவார்கள்
முன் புகுவார் — திருவருளைப் பின்னிட்டு தாம் முன்னே செல்பவர்கள்.
பின் துன்பார் — பின்னர் துன்பம் அடைவர்

**தெளிவுரை**

துன்பம் தரும் ஆணவ இருளைப் போக்கும் திருவருளின் பின்னே செல்பவர்கள் மும்மலங்களும் நீங்கப்பெற்று, பின்னர் (சிவத்துடன் கூடி) பேரின்பம் பெறுவர். அவ்வாறின்றி அருளைப் பின்னிட்டுத் தாம் முன்னே செல்பவர்கள் பின்னர் துன்பமே அநுபவிப்பர்.

72 இருவர் மடந்தையருக்கு என் பயன் இன்பு
உண்டாம்
ஒருவன் ஒருத்தி உறின்.

**பதவுரை**

| | |
|---|---|
| இருவர் மடந்தையர்க்கு | — இரண்டு பெண்கள் புணர்ந்தால் |
| என் பயன் | — இன்பமாகிய பயன் உண்டாமா? இல்லை |
| ஒருவன் | — ஒப்பற்ற ஆண் மகனை |
| ஒருத்தி | — ஒப்பற்ற பெண் |
| உறின் | — கூடினால் |
| இன்பு உண்டாம் | — இன்பம் உண்டாகும் |

(மடந்தை — பெண்)

**தெளிவுரை**

இங்கு இருவர் மடந்தை என்றது திருவருளையும், ஆன்மாவையும் குறிக்கும். ஒருவன் என்றது திருவருளுக்கு முதலாகிய ஒப்பற்ற சிவத்தைக் குறிக்கும். ஒருத்தி என்றது ஒப்பற்ற சிவத்தைக் கூடும் பக்குவநிலையிலுள்ள உயிரைக் குறிக்கும். சிவனது சக்தியாய் அவன்வழி நின்று தொழிற்படுதல் பற்றி திருவருளையும், சிவனால் ஆளப்பட்டு அடங்கி நிற்கும் இயல்புடைமையால் ஆன்மாவையும் பெண்ணாக ஆசிரியர் குறிப்பிட்டார். இருவர் மடந்தையர் கூட்டம் என்றது உயிர் அருளை உணர்ந்து அதனோடு ஒன்றுபட்டு நிற்றலை உணர்த்தும். இந்நிலையில் பாச நீக்கமே நிகழும். பேரின்பம் உண்டாகாது. பின் ஆன்மா திருவருளின் துணையால் சிவத்தைக் கண்டு ஒற்றுமைப்படும். அந்நிலையில் பேரின்பம் உண்டாகும்.

## 73 இன்பதனை எய்துவார்க்கு ஈயும் அவர்க்கு உருவம் இன்பகனம் ஆதலினால் இல்.

**பதவுரை :**

| | |
|---|---|
| இன்பதனை | — பேரின்பத்தை |
| எய்துவார்க்கு | — தன்னை வந்து அணையும் உயிர்க்கு |
| ஈயும் | — கொடுத்தருளும் |
| அவர்க்கு | — இறைவனுக்கு |
| உருவம் | — வடிவம் |
| இன்பகனம் | — இன்பமயமே ஆகும் |
| ஆதலினால் | — இக்காரணத்தால் |
| இல் | — இறைவன் புதிதாகப் பெறும் இன்பம் எதுவுமில்லை |

## தெளிவுரை

தன்னைக் கூடும் உயிர்கட்கு இறைவன் பேரின்பத்தைக கொடுப்பான். உயிர்கள் அதனை அனுபவிக்கும். இறைவன் உயிர்களிடமிருந்து புதிதாக இன்பம் எதுவும் பெறுவதில்லை. ஏனென்றால் அவனுடைய வடிவமே வரம்பில் இன்பமயமானது.

*74 தாடலை போல் கூடி அவை தான் நிகழா வேற்றின்பக்*
*கூடலை நீ ஏகம் எனக் கொள்.*

## பதவுரை

| | |
|---|---|
| தாடலை போல் | — தாள், தலை என்னும் இரண்டு சொற்கள் புணர்ந்து தாடலை என்று ஒரு சொல்லாக நிற்றல் போல |
| அவை கூடி | — சிவமும், ஆன்மாவும் புணர்ந்து |
| தான் வேறு நிகழா | — பிரித்தறிய முடியாத |
| இன்பக் கூடலை | — அப்பேரின்பக் கலப்பினை |
| ஏகம் என | — அத்துவிதம் என்று |
| நீ கொள் | — நீ அறிவாயாக |

## தெளிவுரை

முக்தி நிலையில் இறைவனும், உயிரும் நிற்கின்ற நிலையை இக்குறள் வெண்பா உணர்த்துகின்றது. தாள், தலை என்னும் இருசொற்கள் புணர்ந்து தாடலை என்று ஒரே சொல்லாக நிற்றல் போல முக்தி நிலையில் சிவம், உயிர் என்ற இருவேறு பொருட்கள் பிரித்தறிய முடியாதபடி ஒன்றுபட்டு நிற்கும். இப்பிரிப்பற்ற தன்மையே அத்துவிதம் என்று நீ அறிவாயாக.

*75 ஒன்றாலும் ஒன்றாது இரண்டாலும் ஓசை எழாது*
*என்றால் ஒன்றன்று இரண்டும் இல்.*

## பதவுரை

| | |
|---|---|
| ஒன்றாலும் | — இறைவனும் உயிரும் ஒரே பொருளானால் |
| ஒன்றாது | — அவை ஒன்றாக வேண்டியதில்லை |
| இரண்டாலும் | — இரு வேறு பொருட்களாயின் |
| ஓசை எழாது | — அவை பிரிந்து நின்றால் முக்தி இன்பம் உண்டாகாது |
| என்றால் | — ஆதலால் |
| ஒன்றன்று | — பொருள் ஒன்றன்று |

இரண்டும் இல் — இரண்டும் அன்று. அதாவது இரண்டாயினும் இரண்டாகப் பிரிந்து நில்லாமல் ஒன்ருய் நிற்கும்.

**தெளிவுரை**

இறைவனும் உயிரும் ஒரே பொருளாஞல் அவை ஒன்று கூடத் தேவையில்லை. இரண்டு பொருட்கள் சேரும்பொழுது ஓசை உண்டாகும். பிரிந்து நின்ருல் ஓசை உண்டாகாது. அதுபோல இறைவனும், உயிரும் இருவேறு பொருட்களாயின் பிரிந்து 'நின்ருல் முக்தி இன்பம் உண்டாகாது. எனவே பொருள் ஒன்றன்று, இரண்டே. ஆஞல் முக்தி நிலையில் அவை இரண்டாகப் பிரிந்து நிற்றல் இல்லை என்பது தெளிவு. முன் பாடலில் கூறப்பட்ட அத்துவிதம் என்பதற்கு இப்பாடலில் ஆசிரியர் விளக்கம் தருகின்ருர். அத்துவிதம் என்ருல் இரண்டாகப் பிரிந்து நில்லாதது எனப் பொருள்.

## 76 உற்ருரும் பெற்ருரும் ஓவாது உரைமொழியப் பற்ருரும் அற்ருர் பவம்.

**பதவுரை**

உற்ருரும் — இறைவனை அடைந்தவர்களும்
பெற்ருரும் — பேரின்பம் அனுபவிப்பவர்களும்
ஓவாது — இடையருது
உரைமொழியப்பற்ருரும் — பேச்சற்று பற்றற்றவர்களும்
பவம் — பிறப்பு
அற்ருர் — அற்றவர்களாவர்

**தெளிவுரை**

இறைவனை அடைந்தவர்களும், பேரின்பம் அனுபவிப்பவர்களும் இடையருத மோனநிலை பெற்று ஆசையற்றவர்களும் பிறவியிலிருந்து நீங்கியவர்களாவர்.

## 77 பேய் ஒன்றும் தன்மை பிறக்கும் அளவும் இனி நீ ஒன்றும் செய்யாது நில்.

**பதவுரை**

பேய் ஒன்றும் தன்மை — பேய் பிடித்தவனது தன்மை
பிறக்கும் அளவும் — உனக்கு உண்டாகும் வரை
இனி நீ ஒன்றும் செய்யாமல் — மேலே நீ யாதொரு செயலும் செய்யாமல்
நில் — அசைவற்று நிற்பாயாக !

தெளிவுரை

ஒருவன் பேயால் பிடிக்கப்பட்டால் அவனுக்குத் தன்னறிவும், தன்செயலும் இல்லை. அவனுடைய அறிவும், செயலும் பேயினுடைய அறிவும், செயலுமாகும். அதுபோல சிவபோகம் துய்ப்பவர்கள் தம் செயலற்று எல்லாம் சிவன் செயல் என நிற்பர்.

78 ஒண் பொருட்கண் உற்றார்க்கு உறுபயனே அல்லாது
கண்படுப்போர் கைப்பொருள்போல் காண்.

பதவுரை

| | |
|---|---|
| ஒண் பொருட்கண் | — மேலான பொருளான இறைவனை |
| உற்றார்க்கு | — தம் நிட்டையால் கூடியவர்கட்கு |
| உறுபயனே அல்லாது | — அதன் பயனான பேரின்பத்தைத் துய்ப்பது தவிர ஏனைய செயல்களெல்லாம் |
| கண்படுப்போர் | — கண்மூடித் தூங்குபவர்களின் |
| கைப்பொருள் போல் | — கையிலிருக்கும் பொருள் தானே நழுவுவது போல் |
| காண் | — (நழுவுதலை) நீ அறிவாயாக ! |

தெளிவுரை

மேலான சிவத்தை உணர்ந்த ஞானிகள் சிவப்பேரின்பத்தை மட்டுமே அனுபவிப்பார்கள் அவர்களின் ஏனைய சமயாசாரங்கள் உறங்குபவனின் கையிலுள்ள பொருள் தானே நழுவிவிடுவது போல அவர்களை விட்டு நீங்கும்.

79 மூன்றாய தன்மை அவர் தம்மின் மிக முயங்கித்
தோன்றாத இன்பம் அது என் சொல்.

பதவுரை

| | |
|---|---|
| அவர் | — ஆன்மாவும் சிவனும் |
| தம்மின் மிக முயங்கி | — தம்முள் கூடிய கலப்பினால் |
| மூன்றாய தன்மை | — காண்பான், காட்சி, காணப்படு பொருள் என்ற முத்தன்மைகளும் |
| தோன்றாத இன்பம் அது | — தோன்றாத இன்பத்தை ஆன்மா அனுபவிக்கும் |
| என் சொல் | — அதனை என்ன சொற்களால் கூறமுடியும் |

தெளிவுரை

காண்பான், காட்சி, காணப்படு பொருள், என்ற வேறு-

பாடற்று, ஆன்மா சிவத்தோடு கூடி பேரின்பம் துய்க்கும். அப்பேரின்பத்தை இப்படிப்பட்டதென்று வாக்கினால் கூற முடியாது.

80 இன்பில் இனிது என்றல் இன்பு உண்டேல்
இன்று உண்டாம்
அன்பு நிலையே அது.

**பதவுரை**

இன்பு உண்டேல் — சிவனிடத்துப் பேரன்பு இருக்குமாயின்
இன்பில் இனிது என்றல் — இன்பங்கட்கெல்லாம் தலையாய முக்தி இன்பம்
இன்று உண்டாம் — இப்பிறவியிலேயே உண்டாகும்
அன்பு நிலையே அது — அது அன்பு நிலையால் விளைந்தது

**தெளிவுரை**

சிவபெருமானிடத்து பேரன்பு கொண்ட உயிர்கள் இன்பங்கட்கெல்லாம் தலையாய பேரின்பத்தை இப்பிறவிலேயே அனுபவிக்கும். முக்தி இன்பம் பெற அன்பே வழியாகும்.

## 9. ஐந்தெழுத்து அருள் நிலை

81 அருள் நூலும் ஆரணமும் அல்லாதும் ஐந்தின்
பொருள் நூல் தெரியப் புகின்.

**பதவுரை**

தெரியப் புகின் — ஆராய்ந்து பார்ப்போமானால்
அருள் நூலும் — சிவாகமங்களும்
ஆரணமும் — வேதமும்
அல்லாதும் — இவை அல்லாத ஏனைய ஞான நூல்களும்
ஐந்தின் பொருள் நூல் — திருவைந்தெழுத்தின் பொருளை உணர்த்துவன ஆகும்

**தெளிவுரை**

வேதங்கள், சிவாகமங்கள், ஏனைய ஞான நூல்கள் அனைத்தும் திருவைந்தெழுத்தால் குறிக்கப்படும் பொருளையே விவரிக்கும்.

82 இறை சக்தி பாசம் எழில் மாயை ஆவி
உற நிற்கும் ஓங்காரத்துள்.

**பதவுரை**

ஓங்காரத்துள் — ஓம் என்னும் பிரணவ மந்திரத்தில்
இறை — சிவமும் (சி)
சக்தி — அருளும் (வ)
ஆவி — உயிரும் (ய)
எழில் மாயை — எழுச்சியுடைய மாயையைச் செலுத்தும் திரோதானமும் (ந)
பாசம் — ஆணவ மலமும் (ம)
உற நிற்கும் — பொருந்தி நிற்கும்

**தெளிவுரை**

ஓம் எனப்படும் பிரணவ மந்திரம் பொது. அதன் விரிவாகிய திருவைந்தெழுத்து சிறப்பு மந்திரமாகும். பிரணவத்தில் ஐந்தெழுத்து உணர்த்தும் பொருள்கள் அடங்கியுள்ளன.

ஓம்—அ+உ+ம்
ஐந்தெழுத்து—சி வ ய ந ம

சிவனையும் (சி) அருளையும் (வ) குறிக்கும் எழுத்து—அ
உயிரை (ய) குறிக்கும் எழுத்து—உ
பாசத்தை (ந,ம) குறிக்கும் எழுத்து—ம

சிவ ய நம
V I V
அ உ ம — ஓம்

## 83 ஊன நடனம் ஒரு பால் ஒரு பாலா
## ஞான நடம் தான் நடுவே நாடு.

**பதவுரை :**

ஊன நடனம் — நகர மகரங்களாகிய ஊனக் கூத்து
ஒரு பால் — ஒரு பக்கமும்
ஒரு பால் — மற்றொரு பக்கம்
ஞான நடம் — சிகர வகரங்களாகிய ஞானக் கூத்தும்
ஆ(க) — பொருந்தி நிற்க
தான் — உயிரானது
நடுவே — நடுவிலிருப்பதை
நாடு — நீ அறிவாயாக

**தெளிவுரை**

திருவைந்தெழுத்து சிவயநம என்றும், நமசிவய என்றும்

கூறப்படும். 'நம' திரோதானமும் மலமும் பிறப்பிற்குக் காரணமாய் அமையும். அதை ஊன நடனம் என்கின்றார் ஆசிரியர். 'சிவ' முக்திக்குக் காரணமாய் அமையும். அதை ஞான நடனம் என்கின்றார் ஆசிரியர். இரண்டிற்கும் நடுவே இரண்டையும் சார்ந்து நிற்கும் உயிர் உள்ளது. திரோதனம் என்பது இறைவனின் மறைப்புச் சக்தியைக் குறிக்கும்.

## 84 விரிய மநமேவி யவ்வை மீள விடா சித்தம் பெரியவினை தீரப் பெறும்.

**பதவுரை**

பொருள் கொள்ளும் போது மேற்படி குறள்வெண்பாவை பின்வருமாறு முறைப்படுத்திப் பொருள் காணல் வேண்டும்.

நமேவி ம விரிய ய வ்வை மீளவிடா தம்
பெரிய வினை தீர சி பெறும்

| | |
|---|---|
| ந மேவி | — திரோதான சக்தி பொருந்தி |
| ம விரிய | — மலந்தொழிற்பட |
| ய வ்வை | — அஃது ஆன்மாவை |
| மீளவிடா | — உலகப் பற்றிலிருந்து நீங்க விடா |
| தம் பெரிய வினை தீர | — ஆன்மா மலத்திலிருந்து நீங்கியதும் |
| சி பெறும் | — சிவத்தை அடையும் |

**தெளிவுரை :**

இறைவனின் திரோதான சக்தியே உயிரைப் பற்றியுள்ள மலங்களைத் தொழிற்படும்படிச் செய்கின்றது. மலம் தொழிற்பட உயிர்கள் இறைவனை மறந்து உலகப் பற்றில் உழலும். மலம் தொழிற்பட தொழிற்பட அதன் சக்தி நாளடைவில் தேயும். மல சக்தி நீங்கியதும் திரோதான சக்தி அருள் சக்தியாய் மாறி விடும். மலம் நீங்கிய உயிர் அருள் சக்தியினால் சிவத்தை அடைந்து இன்புறும்.

## 85 மால் ஆர் திரோத மலம் முதலா மாறுமோ மேலா சி மீளா விடின்.

**பதவுரை**

பின்வருமாறு முறைப்படுத்தி பொருள் கொள்ளல் வேண்டும்.

சி மேல் ஆ மீளா விடின் மால் ஆர்
திரோதம் மலம் முதல் ஆ மாறுமோ

| | |
|---|---|
| சி மேல் ஆ | — சிகரம் முதலில் வரும்படி |
| மீளாவிடின் | — மாற்றி உச்சரிக்காவிடில் |
| மால் ஆர் | — மயக்கம் பொருந்திய |

| | | |
|---|---|---|
| திரோதம் | — | திரோதானமும் |
| மலம் | — | மலமும் |
| முதல் ஆ | — | முதலாயின |
| மாறுமோ | — | நீங்குமோ |

**தெளிவுரை**

திருவைந்தெழுத்தில் சி சிவத்தைக் குறிப்பதால் சிவயநம என உச்சரிப்பதே சிறப்பு. சிவனைக் குறிக்கும் சிகரத்தை முதலாக வைத்து சிவயநம என உச்சரிக்காவிடில் உயிர்களைப் பற்றியுள்ள மலம் நீங்காது.

## 86 ஆர் ஆதி ஆதாரம் அந்தோ அது மீண்டு பாராது மேலோதும் பற்று

**பதவுரை**

| | | |
|---|---|---|
| ஆர் ஆதி ஆதாரம் | — | உயிர்கட்கு ஆதாரமாக இருப்பது யார் சிவமல்லவா? |
| அது | — | அந்த சிவம் |
| மீண்டு | — | திரும்பவும் |
| பாராது | — | உலகியலைப் பார்க்க விடாது (இதனை உணராது) |
| மேல் ஓதும் | — | நகர மகரங்களை முதலில் வைத்து உச்சரிக்கின்ற |
| பற்று | — | விருப்பமானது |
| அந்தோ | — | இரங்கத்தக்கதாகும் |

**தெளிவுரை**

உயிர்கட்கு ஆதாரமான சிவனைக் குறிக்கும் சிகரத்தை முதலாக வைத்து சிவாயநம என ஓதினால் உலகப்பற்று நீங்கும். அவ்வாறின்றி திரோதானத்தை (மறைப்பை) உணர்த்தும் நகரத்தை முதலாக வைத்து நமசிவாய என ஓதுவது பிறப்பிறப்பு துன்பத்தைத் தரும். எனவே அவ்வாறு ஓதுவது இரங்கத்தக்கது.

## 87 சிவ முதலே ஆமாறு சேருமேல் தீரும் பவம் இது நீ தும்பீடி.

**பதவுரை**

| | | |
|---|---|---|
| சிவ முதலே | — | சிகர வகரங்கள் முதலாக |
| ஆமாறு | — | அமையும்படி |

| | |
|---|---|
| சேருமேல் | — உச்சரித்தால் |
| லவம் | — பிறப்பு |
| தீரும் | — நீங்கும் |
| இது | — இந்த முறையே |
| நீ ஓதும்படி | — நீ ஓதும் முறையாகும் |

தெளிவுரை

சிகர வகரங்களை முதலாக வைத்து சிவாயநம என உச்சரித்தால் பிறவித்துன்பம் நீங்கும். இதுவே வீடுபேறடைய விரும்பும் உயிர்கள் திருவைந்தெழுத்தை ஓதும் முறையாகும்.

88 வா சி அருளி யவை வாழ்விக்கும் மற்று அதுவே
ஆசு இல் உருவமுமாம் அங்கு.

பதவுரை

| | |
|---|---|
| வா | — திருவருள் |
| யவை | — ஆன்மாவை |
| சி அருளி | — சிவத்துடன் சேர்த்து |
| வாழ்விக்கும் | — வீட்டின்பத்தைத் தரும் |
| மற்று | — அன்றியும் |
| அதுவே | — அத்திருவருளே |
| அங்கு | — அச்சிவத்திற்கு |
| ஆசு இல் | — குற்றமற்ற |
| உருவமுமாம் | — திருமேனியும் ஆகும் |

தெளிவுரை

திருவருளே ஆன்மாவை சிவனுடன் சேர்த்து வீட்டின்பம் தரும். மேலும் அத்திருவருளே அந்த சிவனுக்குத் தூய திருமேனியாகவும் அமையும்.

89 ஆசின் ந வா நாப்பண் அடையாது அருளினுல்
வா சி இடை நிற்கை வழக்கு

பதவுரை

| | |
|---|---|
| ஆசில் ந | — குற்றமற்ற திரோதான சக்தியாகிய நகரத்திற்கும் |
| வா | — அருளுக்கும் |
| நாப்பண் | — நடுவே |
| அடையாது | — உயிர் நில்லாமல் |

அருளினுல் — திருவருளால்
வா சி இடை — வகரத்திற்கும் சிகரத்திற்கும் இடையே
நிற்கை — நிற்றல்
வழக்கு — முறைமையாகும்

**தெளிவுரை :**

'சிவாயநம' என்பதில் உயிர் (ய) வகரத்திற்கும், நகரத்-திற்கும் இடையில் உள்ளது. அங்ஙனமின்றி உயிர் வகரத்திற்கும் சிகரத்திற்கும் இடையில் நிற்றல் சிறப்பு என்கின்ருர் ஆசிரியர். அதாவது சிவயசிவ என்பதில் உயிர் (ய) வகரத்திற்கும். சிகரத்திற்கும் இடையில் உள்ளது. எனவே 'சிவாயநம' என்பதை விட 'சிவயசிவ' என உச்சரித்தால் இன்னும் சிறப்பாகும். 'சிவயசிவ' ல் உயிர் நகரத்தை, மகரத்தைச் சாரவில்லை. சிவத்தையும், அருளேயுமே (இருபக்கமும்) சார்ந்துள்ளது.

## 90 எல்லா வகையும் இயம்பும் இவன் அகன்று நில்லா வகையை நினைந்து.

**பதவுரை**

இவன் — ஆன்மாவானது
அகன்று — சிவத்தையும், சக்தியையும் விட்டு நீங்கி
நில்லாவகையை — நில்லாது உடனுய் நிற்கும் தன்மையை
நினைந்து — கருதியே
எல்லா வகையும் — எல்லா ஞான நூல்களும்
இயம்பும் — பேசும்

**தெளிவுரை**

எல்லா ஞான சாத்திரங்களும் ஆன்மாவானது சிவத்தையும், சக்தியையும் விட்டு நீங்காது நிற்க வேண்டிய நிலையையே உணர்த்தும்.

# 10. அணைந்தோர் தன்மை

## 91. ஓங்கு உணர்வின் உள்ளொடுங்கி உள்ளத்துள் இன்பொடுங்கத் தூங்குவர் மற்று ஏது உண்டு சொல்.

**பதவுரை**

ஓங்கு உணர்வின் — மேலான சிவஞானத்தால்

| | |
|---|---|
| உள்ளொடுங்கி | — தம் அறிவு இச்சை, செயல்கள் அடங்கப் பெற்று |
| உள்ளத்துள் | — தம் அறிவினுள் |
| இன்பு ஒடுங்க | — பேரின்பம் அடங்கும்படி |
| தூங்குவர் | — நிட்டையில் ஆழ்ந்திருப்பர் |
| மற்று | — வேறு |
| ஏது உண்டு சொல் | — சொல்ல என்ன உள்ளது |

**தெளிவுரை**

மேலான சிவஞானத்தால் தம் உணர்வை அடக்கி, நிட்டையில் ஆழ்ந்து பேரின்பம் துய்ப்பது தவிர வேறு செயல்கள் சீவன் முத்தர்கட்கு இல்லை.

## 92 ஐந்தொழிலும் காரணர்கள் ஆம்தொழிலும் போகம்நுகர்
## வெம் தொழிலும் மேவார் மிக.

**பதவுரை**

| | |
|---|---|
| ஐந்தொழிலும் | — இறைவன் செய்யும் ஐந்தொழில்களையேனும் |
| காரணர்கள் ஆம் தொழிலும் | — பிரமன், திருமால், உருத்திரன், மகேசுவரன், சதாசிவன் இவர்கள் செய்யும் ஒவ்வொரு தொழிலையேனும் |
| போகம் நுகர் வெம் தொழிலும் | — துன்பம் தரும் உலக இன்பத்தை நுகரக் கூடிய தொழிலையேனும் |
| மிக மேவார் | — சீவன் முத்தர்கள் செய்ய விரும்பார்கள் |

(ஐந்தொழில்களாவன — படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல்.

சிவன் இவ்வைந்தொழில்களையும் தானே செய்வன். பிரமன், திருமால், உருத்திரன், மகேசுவரன், சதாசிவன், இவர்களைக் கொண்டும் செய்விப்பதும், உண்டு. இவர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு தொழில் மட்டுமே செய்வர். அத்தொழிலையும் சிவனருளால் அவன் ஏவலால் செய்வர்.

| காரணக் கடவுள் | | தொழில் |
|---|---|---|
| பிரமன் | — | படைத்தல் |
| திருமால் | — | காத்தல் |
| உருத்திரன் | — | அழித்தல் |
| மகேசுவரன் | — | மறைத்தல் |
| சதாசிவன் | — | அருளல்) |

### தெளிவுரை

சீவன் முத்தர்கள் சிவனைப் போன்று ஐந்தொழில்களையோ, காரணக் கடவுளர் செய்யும் ஏதாவது ஒரு தொழிலையோ, போகம் நுகர்வதற்குக் காரணமான வெய்ய வினைகளோ எதுவுமே செய்யார்.

## 93 எல்லாம் அறியும் அறிவுறினும் ஈங்கிவர் ஒன்று
## அல்லாது அறியார் அற.

### பதவுரை

| | |
|---|---|
| எல்லாம் அறியும் | — யாவற்றையும் அறியும் |
| அறிவுறினும் | — சிவஞானத்தைப் பெற்றிருந்தாலும் |
| ஈங்கு | — முக்தி நிலையில் |
| இவர் | — சீவன் முத்தர்கள் |
| ஒன்று அல்லாது | — ஒப்பற்ற சிவனைத் தவிர வேறு எதையும் |
| அறியார் அற | — சிறிதும் அறியமாட்டார் |

### தெளிவுரை

சீவன் முத்தர்கள் எல்லாவற்றையும் அறியும் வல்லமையுடைய சிவஞானத்தைப் பெற்றிருந்தாலும் சிவபரம் பொருளைத் தவிர வேறு எதனையும் அறியார். அறியாதிருத்தலுக்கு அறிய விரும்பாமையே காரணம் ஆகும்.

## 94 புலன் அடக்கித் தம்முதற்கண் புக்குறுவர் போதார்
## தலன் நடக்கும் ஆமை தக.

### பதவுரை

| | |
|---|---|
| தலன் நடக்கும் | — தரையில் நடக்கும் |
| ஆமை தக | — ஆமை கால் முதலியவற்றைத் தம் ஓட்டிற்குள் அடக்கிக் கொள்தல் போல |
| புலன் அடக்கி | — சீவன் முத்தர்கள் ஐம்புலன்களையும் அடக்கி |
| தம் முதற்கண் | — தம் முதற்பொருளான சிவனிடத்தில் |
| புக்குறுவர் | — புகுந்து பொருந்தியிருப்பர் |
| போதார் | — அதை விட்டு என்றும் நீங்கார் |

### தெளிவுரை

நிலத்தில் நடக்கும் ஆமை இடையூறு எதிர்ப்படும் போது, தன் நான்கு கால்களையும், முகத்தையும் ஓட்டிற்குள் அடக்கி அசைவற்றுக் கிடக்கும். அதுபோல சீவன் முத்தர்கள் துன்பம்

தரும் உலக விடயங்களில் செல்லவிடாது தம் புலன்களை அடக்கிக் கொள்வர். தமக்குப் புகலிடமான சிவபரம் பொருளை விட்டு என்றும் நீங்கார்.

## 95 அவனை அகன்று ஏங்கு இன்றும் ஆங்கு அவனும் ஏங்கும்
## இவனை ஒழிந்து உண்டாதல் இல்.

**பதவுரை**

| | |
|---|---|
| அவனை அகன்று | — சிவனை நீங்கி |
| எங்கு இன்றும் | — எவ்வுலகமும் இல்லை |
| ஆங்கு | — அதுபோல |
| அவனும் இவனை ஒழிந்து | — சிவமாந்தன்மை பெற்ற முத்தனை நீங்கி |
| எங்கும் | — எந்த உலகமும் |
| உண்டாதல் இல் | — உளதாதல் இல்லை |

**தெளிவுரை**

சிவனில்லாமல் எவ்வுலகமும் இல்லாததுபோல, சிவத்தன்மை பெற்ற சீவன் முத்தர்களை விட்டு எந்த உலகமும் இல்லை. அதாவது சீவன் முத்தர்களும் சிவனைப் போன்று சர்வ வியாபகர்கள் என்பது கருத்து.

வியாபகம் — எங்கும் நிறைந்து நிற்றல்
வியாபகர் — எங்கும் இருப்பர்

## 96 உள்ளும் புறம்பும் ஒரு தன்மைக் காட்சியர்க்கு
## எள்ளும் திறம் ஏதும் இல்.

**பதவுரை**

| | |
|---|---|
| உள்ளும் புறம்பும் | — உள்ளேயும் வெளியேயும் |
| ஒரு தன்மைக் காட்சியர்க்கு | — ஒரே தன்மையாய் விலங்கும் சீவன் முத்தர்கட்கு |
| எள்ளும் திறம் | — எதனையும் இகழும் பண்பு |
| ஏதும் இல் | — சிறிதும் இல்லை |

**தெளிவுரை**

சீவன் முத்தர்கள் வெளியே பூண்டுள்ள சிவ வேடத்திற்கு ஏற்ப, அவர்கள் உள்ளமும் சிவனையே நினைந்து கொண்டிருக்கும். பிற உயிர்களைப் போற்றுதலும் செய்யார். பழித்தலும் செய்யார். அவர்கள் விருப்பு, வெறுப்பு அற்றவர்கள். மேலும் சீவன்

முத்தர்களின் உள்ளம் சிவனை நினைத்திருக்க, அவர்கட்குப் புறத்தே காணும் பொருள்களனைத்தும் சிவமாகவே தோன்றும் என்றும் பொருள் கூறலாம்.

## 97 உறும் தொழிற்குத் தக்கபயன் உலகம் தத்தம் வறுந் தொழிற்கு வாய்மை பயன்.

**பதவுரை**

| | |
|---|---|
| தம் உறும் தொழிற்கு | — யான் எனது என்று செருக்கோடு செய்யும் உயிர்களின் வினைகட்கு |
| தக்க பயன் | — தகுந்த பயன் |
| உலகம் | — உலக வாழ்க்கையாகும் |
| தம் வறும் தொழிற்கு | — செருக்கற்றுச் செய்யும் செயல்கட்கு |
| வாய்மை | — வீட்டின்பமே |
| பயன் | — பயனாகும் |

**தெளிவுரை**

யான் எனது என்னும் செருக்கோடு செயலாற்றும் உயிர்கள் பிறப்பிறப்பில் உழலும். சீவன் முத்தர்கள் செருக்கு நீங்கி எல்லாம் சிவன் செயல் என எதையும் செய்வதால் பேரின்பம் அடைவர்.

## 98 ஏன்ற வினை உடலோடு ஏகும் இடை ஏறும் வினை தோன்றில் அருளே சுடும்.

**பதவுரை**

| | |
|---|---|
| ஏன்ற வினை | — எடுத்து வந்த பிராரப்த வினையானது |
| உடலோடு ஏகும் | — உடலளவில் அநுபவித்துக் கழியும் |
| இடையேறும் வினை | — இடையே புதிய ஆகாமிய வினை |
| தோன்றில் | — தோன்றினால் |
| அருளே சுடும் | — திருவருளே சுட்டெரித்து விடும் |

**தெளிவுரை**

சைவசித்தாந்தத்தில் உயிர்கள் ஆணவத்தால் செய்கின்ற நல்வினை, தீவினைகள் ஆகாமியம் என்று சொல்லப்படும். அவ்வாறு பிறவிகள்தோறும் செய்த வினைகளின் தொகுப்பு சஞ்சிதம் எனப்படும். அதிலிருந்து ஒரு பிறவியில் அநுபவிக்க எடுத்து வந்த வினை பிராரப்தம் எனப்படும். சீவன் முத்தர்கள் பிராரப்த வினையை உடலால் அநுபவித்துக் கழிப்பர். அஃது அவர்கள் உயிரைத் தாக்காது. பிராரப்த வினையை அநுபவிக்கும் பொழுது

உண்டாகும் விருப்பு, வெறுப்பு காரணமாகச் செய்யும் செயல்-களால் புதிய ஆகாமியவினை உண்டாகும். சீவன் முத்தர்கள் பிராரப்தத்தை விருப்பு, வெறுப்பின்றி அனுபவிப்பதால் அவர்கட்குப் புதிய ஆகாமியவினை உண்டாகாது. அப்படியின்றி ஒருவேளை உண்டாகுமானால் அவர்கள் அருள்வழி நிற்பதால் திருவருளே அந்த ஆகாமியவினையை சுட்டெரித்து விடும். குருவருளால் அவர்களின் சஞ்சித வினைகள் நீங்கும்.

இதனால் சீவன் முத்தர்கட்கு வினைத் தொடர்பு இல்லை என்று உணர்த்தப்பட்டது.

## 99 மும்மை தரும் வினைகள் மூளாவாம் மூதறிவார்க்கு அம்மையும் இம்மையே ஆம்.

**பதவுரை**

| | |
|---|---|
| மும்மை தரும் வினைகள் | — இம்மை (இப்பிறப்பு), மறுமை (மறுபிறப்பு), அம்மை (பரமுக்தி) தரும் வினைகள் |
| மூளாவாம் | — உண்டாகாது |
| மூதறிவார்க்கு | — சீவுன் முத்தர்கட்கு |
| அம்மையும் | — பரமுக்தியும் |
| இம்மையே ஆம் | — இப்பிறப்பிலேயே உண்டாகும் |

**தெளிவுரை**

சீவன் முத்தர்கட்கு மூவகைப் பலன்களைத் தரும் வினைகள் இல்லை. (உடம்பு நீங்கிய பின் உயிர்கள் இறைவனோடு ஐக்கிய-மாகி அடையும் பேரின்பம் பரமுக்தி என்று சொல்லப்படும்.) சீவன் முத்தர்க்கு அத்தகைய பரமுக்தி நிலை உடம்போடு கூடிய இப்பிறவியிலேயே உண்டாகும்.

மும்மை தரும் வினைகள் என்பதற்கு மனம், வாக்கு, காயம் இவற்றால் செய்யப்படும் வினைகள் என்றும் பொருள் கூறுவது உண்டு. மும்மைதரும் வினைகள் என்பது ஆகாமியம், சஞ்சிதம், பிராரப்தத்தைக் குறிப்பதாகவும் கூறுவர்.

100 கள்ளத் தலைவர் துயர்கருதித் தம்கருணை
வெள்ளத்து அலைவர் மிக.

**பதவுரை**

| | |
|---|---|
| கள்ளத் தலைவர் | — தம்மைத் தலைவர்களாகக் கருதும் உயிர்களின் |
| துயர் கருதி | — துன்பத்தைக் கண்டு |
| தம் கருணை வெள்ளத்து | — சீவன் முத்தர்கள் பெரும் கருணையோடு |
| மிக அலைவர் | — மிகவும் இரங்குவர் |

**தெளிவுரை**

சிவனது தலைமையை மறந்து தம்மையே தலைவர்களாகக் கருதும் உயிர்கள் படும் துன்பங்களைக் கண்டு, சீவன் முத்தர்கள் பெருங்கருணையோடு இரங்கி, அவர்கள் துன்பம் நீங்க அருள் செய்வர்.

**திருவருட்பயன் உரை முற்றிற்று.**

**திருச்சிற்றம்பலம்.**



# வினா விடை

## நூல்

1 கேள்வி : திருவருட்பயன் நூலின் ஆசிரியர் யார்?
பதில் : உமாபதி சிவம்.

2 கே : எத்தனை செய்யுட்களைக் கொண்டது?
ப : நூறு செய்யுட்கள்.

3 கே : செய்யுளின் யாப்பு யாது?
ப : குறள் வெண்பா.

4 கே : நூல் எத்தனை அதிகாரங்களைக் கொண்டது?
ப : பத்து அதிகாரங்கள்.

5 கே : அதிகாரங்களின் பெயர்கள் யாவை?
ப : 1. பதிமுதுநிலை 2 உயிரவைநிலை 3 இருள்மலநிலை 4. அருளதுநிலை 5. அருளுருநிலை 6 அறியும் நெறி 7. உயிர் விளக்கம் 8. இன்புறுநிலை 9. ஐந்தெழுத்து அருள்நிலை 10. அணைந்தோர் தன்மை.

6 கே : காப்புச் செய்யுள் யார் மீது பாடப்பட்டுள்ளது?
ப : விநாயகப் பெருமான் மீது.

7 கே : ஏன்?
ப : விநாயகருக்கு விக்னேசுவரர் என்ற பெயரும் உண்டு. விக்னேசுவரர் என்றால் இடையூறை நீக்குபவர் எனப் பொருள். நூல் இடையூறின்றி முடியும் பொருட்டு விநாயகப் பெருமான் மீது காப்புச் செய்யுள் பாடப்படுகின்றது.

8 கே : காப்புச் செய்யுளின் பொருள் கூறுக
ப : காப்புச் செய்யுளின் தெளிவுரையைப் பார்க்கவும்.

## 1. பதிமுதுநிலை

1 கே : சிவபெருமானை எதற்கு ஒப்பிட்டுக் கூறுகிறார்?
ப : அகர எழுத்திற்கு.

2 கே : பின் ஏன் 'நிகரில் இறை' என்று கூறுகின்றார்?
ப : 'அ' என்னும் உயிரெழுத்துப் போல பிற 11 உயிரெழுத்துக்கள் உள்ளன. அ – குறில். இது போல் மேலும் நான்கு குறில் எழுத்துக்கள் உள்ளன. அகர எழுத்துக்கு அறிவு கிடையாது.

இன்றவனுக்கு ஒப்பாக வேறு தெய்வம் இல்லை. இறைவன் முற்றுணர்வும், இயற்கை உணர்வும் உடையவன். எனவே 'நிகரில் இறை' என்கின்றார்.

3 கே : சிவனுக்கும் சக்திக்கும் உள்ள தொடர்பு யாது?
ப : பிரிப்பற்றது.

4 கே : சிவபெருமானை ஒப்பற்றவர் என்று கூறக் காரணம் என்ன?
ப : உலகமனைத்தும் சிவபெருமான் தனக்குள் அடங்கக் கொண்ட பெருமையுடையவர். உயிர்க்குள் உயிராய் விளங்கும் நுட்பமானவர். உயிர்களிடத்துப் பெருங் கருணையுடையவர். உயிர்கட்கு வீடுபேற்றைத் தருபவர் எனவே அவர் ஒப்பற்றவர்.

5 கே : சிவபெருமான் செய்யும் தொழில்கள் எவை?
ப : படைத்தல், காத்தல், ஒடுக்குதல்.

6 கே : சிவனுக்குரிய மூவகைத் திருமேனிகள் எவை?
ப : அருவம், அருவுருவம், உருவம்.

7 கே : அருவம் என்றால் என்ன?
ப : கண்ணுக்குப் புலனாகாதது.

8 கே : அருவுருவம் என்றால் என்ன?
ப : கண்ணுக்குப் புலனாவது. ஆனால் கை, கால், முகம் போன்ற உறுப்புக்கள் இல்லாதது.

9 கே : உருவம் என்றால் என்ன?
ப : கண்ணுக்குப் புலனாவது. கை, கால், முகம் போன்ற உறுப்புக்களை உடையது.

10 கே : ஞானிகட்கு அவன் எப்படிப்பட்ட வடிவம் உடையவன்?
ப : ஞானமே வடிவானவன்.

11 கே : உயிரறிவுக்கும் இறைவனின் அறிவுக்கும் என்ன வேறுபாடு?
ப : உயிர்கள் அறிவிக்க அறிவன. இறைவன் தானே அறிபவன்.

12 கே : தேவர்கட்கும், அடியவர்கட்கும் சிவபெருமான் எப்படிப்பட்ட தன்மையுடையவர்?
ப : தேவர்கள் காண்பதற்கு அரியவர். அடியவர்கட்கு எளியவர்.

13 கே : 'எரியுறு நீர்போல்' என்ற உவமை மூலம் ஆசிரியர் உணர்த்துவது யாது?

ப : வெந்நீரில் வெப்பம் எல்லா இடத்திலும் பரவி இருப்பது போல, சிவபெருமான் எல்லா இடத்திலும், எல்லா உயிர்களிடத்தும் இரண்டறக் கலந்து நிற்பதை உணர்த்துகின்றார்.

14 கே : பின், 'தனி' என்று சொல்லக் காரணம் என்ன?

ப : அவற்றில் தோயாது நிற்பதால் தனி என்கின்றார். அதாவது அவர் எல்லாவற்றிலும் கலந்திருந்தாலும் அதனால் விகாரமடைய மாட்டார்.

15 கே : 'சலமிலன்' என்றால் பொருள் என்ன? சிவபெருமானை சலமிலன் என்று சொல்லக் காரணம் என்ன?

ப : சலமிலன்—பாரபட்சமில்லாதவன். செய்பவர் செயலுக்குத் தக பலன் தருவதால்.

16 கே : சங்கரன் என்றால் பொருள் என்ன?

ப : சுகத்தைச் செய்பவன் என்பது பொருள்.

17 கே : சிவபெருமானே முழுமுதற்கடவுள் என்பதைக் குறிக்கும் சொற்றொடர்கள் எவை?

ப : நிகரில் இறை, ஒப்பின்மையான், மேல் ஒருவன் இல்லாதான் எங்கள் இறை.

18 கே : சிவபெருமானை ஏன் தியானித்து வழிபடவேண்டும்?

ப : சிவபெருமான் பிறவி நோயைப் போக்கும் மருந்தாக விளங்குவதால் அவரைத் தியானித்து வழிபட வேண்டும்.

## உ. உயிரவை நிலை

19 கே : உயிர்கள் எத்தனை?

ப : உயிர்கள் எண்ணிறந்தன.

20 கே : அவற்றின் வகைகள் யாவை?

ப : மூவகை

21 கே : எவை?

ப : 1. ஆணவம், கன்மம், மாயை என்ற மும்மலமுடைய உயிர்கள். அவை சகலர் எனப்படும்.

2. ஆணவம், கன்மம் என்ற இருமலமுடைய உயிர்கள் பிரளயாகலர் எனப்படும்.

3. ஆணவம் என்ற ஒரு மலம் மட்டும் உடைய உயிர்கள் விஞ்ஞானகலர் எனப்படும்.

22 கே : மூவகை உயிர்களையும் பிணித்துள்ள மலம் எது?
ப : ஆணவமலம்.

23 கே : பிணிப்பு எப்படிப்பட்டது?
ப : சகலரை ஆணவம் வன்மையாகப் பிணித்திருக்கும்.
பிரளயாகலரை ஆணவம் இடைப்பட்ட நிலையில் பிணித்திருக்கும்.
விஞ்ஞானகலரை ஆணவம் மென்மையாகப் பிணித்திருக்கும்.

24 கே : ஆணவமலம் பிணிப்பை அறியாதார் யார்?
ப : சகலர்.

25 கே : அப்பிணிப்பை அறிவோர் யார்?
ப : பிரளயாகலர், விஞ்ஞானகலர்.

26 கே : ஆன்மாக்கட்குச் சுதந்திரச் செயல் உண்டா?
ப : இல்லை.

27 கே : ஆன்மா அறிவுப் பொருள் என்று சொல்வது பொருந்துமா?
ப பொருந்தும். ஆனால் அவ்வறிவில் குறைபாடுகள் உள்ளன.

28 கே : என்ன குறைபாடுகள்?
ப : 1. அவை தாமே அறிவன அல்ல. இறைவன் அறிவிக்க அறிபவை.
2. பொறிகளின் உதவியால் அறிபவை.
3. பொருட்களில் அழுந்தி அறிபவை.
4. ஒவ்வொன்ருக அறிபவை.
5. அறிந்ததை மறப்பவை.

29 கே : அதன் அறிவு எப்பெயரால் அழைக்கப்படும்?
ப : பரதந்தர அறிவு என்று.

30 கே : அவ்வறிவால் எவற்றை அறியும்?
ப : சிவத்தையும், பாசத்தையும் அறியும்.

31 கே : சிவம் எப்படிப்பட்ட பொருள்?
ப : சத்துப்பொருள்.

32 கே : சத்துப்பொருள் என்ருல் என்ன?
ப : மாறுதலின்றி என்றும் நிலைத்துள்ள பொருள்.

33 கே : பாசம் எப்படிப்பட்ட பொருள்?
ப : அசத்துப்பொருள்.

34 கே : அசத்து என்றால் என்ன?
ப : தோன்றி, நின்று அழியும் தன்மையுடையவை.

35 கே : இவ்விரண்டையும் அறியும் ஆன்மாவிற்கு என்ன பெயர்?
ப : சதசத்து.

36 கே : சதசத்து என்பதை விளக்கு.
ப : ஆன்மா சத்தாகிய இறைவனைச் சார்ந்து அழுந்தி அனுபவிக்கும் போது சத்தாம் தன்மையைப் பெறும். அசத்தாகிய உலகத்தைச் சார்ந்து அனுபவிக்கும் போது அசத்தாம் தன்மையைப் பெறுவதால் அது சதசத்து எனப்படும்.

37 கே : இருவேறுபட்ட தன்மையுடைய பொருட்களைச் சார்ந்து அதன்தன் தன்மையை பெறுவதை விளக்கும் உலகப் பொருட்கள் யாவை?
ப : கண், படிகம், ஆகாயம்.

38 கே : எப்படி?
ப : இம்மூன்று பொருட்களும் இருளில் இருளாகவும், ஒளியில் ஒளியாகவும் திகழும்.

39 கே : எவ்வகை ஆன்மாக்கள் சிவத்தைக் காணும்?
ப : பெத்தான்மாக்கள் (பாசத்தால் பந்திக்கப்பட்ட ஆன்மாக்கள்)

40 கே : அதன் விளைவு யாது?
ப : ஆன்மாக்கள் படும் துன்பம் கண்டு ஆசாரியர்கள் வருந்துகிறார்கள்.

41 கே : வருத்தத்திற்குக் காரணம் என்ன
ப : இவை திருவருளை உணர்வது எப்பொழுது என்று.

## 3. இருள் மல நிலை

42 கே : உள்பொருள்களுள் மூன்றாவது எது?
ப : பாசம்.

43 கே : பாசம் எதை மறைக்கும்?
ப : சிவத்தை மறைக்கும்.

44 கே : பாசம் எத்தனை வகைப்படும்?
ப : ஆணவம், கன்மம், மாயை என மூவகைப்படும்.

45 கே : இவற்றுள் முதல் தடையாய் விளங்குவது யாது?
ப : ஆணவம்.

46 கே : ஆணவத்தைக் குறிக்கும் சொல் எது?
ப : இருள்.

47 கே : இருள் என்று சொல்லப்படுவது ஏன்?
ப : அதன் மறைக்கும் சக்தியால்.

48 கே : ஆணவம் இருளைவிடக் கொடியதாக் கூறப்படுவது ஏன்?
ப : இருள் புறப்பொருட்களை மட்டும் தான் மறைக்கும். ஆணவம் சிவம் என்ற பொருளையும், மறைக்கும். தன்னையும் மறைக்கும். இருள் தன்னைப் புலப்படுத்துவதால் அதிலிருந்து நீங்க மக்கள் வழி தேடுவர். ஆனால் ஆணவம் தன் இருப்பைப் புலப்படுத்தாது. ஆதலால் அதிலிருந் நீங்க மக்கள் முயற்சிக்காததால் அஃது ஆணவத்தைவிடக் கொடியதாகும்.

49 கே : ஆணவத்தின் பிணிப்பு யாருக்கு உண்டு?
ப : ஆன்மாவிற்கு.

50 கே : யாருக்குக் கிடையாது?
ப : பதிக்கு.

51 கே : ஆன்மாவிற்கு ஆணவமலம் தன்னைப் பிணித்துள்ளது என்று தெரியுமா?
ப : தெரியாது.

52 கே : ஆன்மாவிற்கு அறியாமை எதனால் வந்தது?
ப : ஆணவமலத்தால்.

53 கே : ஆன்மாவின் துன்பத்திற்குக் காரணம் என்ன?
ப : அவற்றைப் பிணித்துள்ள ஆணவமலமே காரணம்.

54 கே : ஆணவம் ஆன்மாவின் குணமா? குற்றமா?
ப : குற்றம்.

55 கே : குற்றம் என்று சொல்லப்படுவது ஏன்?
ப : குற்றம் நீக்கப்படும் போது பொருள் இருக்கும். குணமாயின் குணம் நீங்கும் போது பொருளும் அழிந்துவிடும். முக்தியில் ஆணவம் நீங்கினாலும் (சக்தி அடங்கி நின்றாலும்) உயிர் அழியாது உள்ளது. எனவே ஆணவம் உயிரின் குணமன்று. குற்றமே.

56 கே : ஆணவம் உயிரை இடையில் வந்து பற்றியதா?
ப : அநாதியாய்ப் பற்றியுள்ளது.

57 கே : இடையில் வந்து பற்றியது என்று கூறினால் என்ன?
ப : இடையில் வந்து பற்றியதற்குக் காரணம் கூற வேண்டும். காரணம் கூற முடியாது.

58 கே : ஆணவம் அநாதி என்றால் அது உயிரை விட்டு நீங்காதா?

ப : ஆணவத்தின் மறைத்தல் சக்தி மட்டும் நீங்கும்.

59 கே உயிர் ஆணவத்திலிருந்து நீங்க என்ன செய்ய வேண்டும்?

ப : திருவருளைப் பற்றிக் கொள்ள வேண்டும்.

60 கே : ஆணவமலத்தையும், திருவருளையும் ஆசிரியர் எப்படிக் குறிப்பிடுகிறார்?

ப : ஆணவத்தை இருளென்றும், திருவருளை சூரிய ஒளியென்றும் குறிப்பிடுகின்றார்.

61 கே : ஆணவ இருளை நீக்க உதவுவன யாவை?

ப : மாயையும், கன்மமும் உதவும்.

62 கே : அவற்றை எதாக ஆசிரியர் உவமிக்கிறார்?

ப : விளக்கொளியாக உவமிக்கிறார்.

## 4. அருளது நிலை

63 கே செல்வத்துள் தலையாய செல்வம் எது?

ப : அருட்செல்வம்.

64 கே : ஏன்?

ப : அருளிருந்தால் பிற செல்வங்கள் எல்லாம் தானே வரும்.

65 கே : திருவருள் உயிர்கட்குச் செய்யும் உதவி யாது?

ப : உயிர்கள் செயலாற்றவும், அச்செயல்கட்கேற்ற பலன்களைத் துய்ப்பதற்கும் திருவருள் துணையாய் அமைகின்றது. மேலும் திருவருள் உயிர் அறிவிற்கு, அறிவித்தும், அறிந்தும் உதவி செய்கின்றது.

66 கே : உயிர்கள் திருவருளை அறியாத் தன்மைக்கு ஆசிரியர் கூறும் உவமைகள் யாவை?

ப : 1. பாற்கடலிலுள்ள மீன் பாலைப் பருகாது அதிலுள்ள புழுபூச்சிகளை உண்ணுதல்.

2. தனக்குத் துணையாக வருபவனை அறியாத வழிப்போக்கன்.

3. ஐம்பொறிகள் தம்மைத் தொழிற்படுத்தும் உயிரை அறியாத நிலை.

4. நடப்பதற்குத் தாரகமாக விளங்கும் தரையை அறியாத நிலை.

5. மலை, மண், வான் ஆகியவை தொலைந்தது போல் தேடும் நிலை.

6. நிறைந்த நல்ல நீரில் இருந்தும் பருகாது நாவறட்சி அடையும் நிலை.

7. எங்கும் சூரியஒளி பிரகாசிக்கவும் கண்ணை மூடிக் கொண்டு இருட்டு என்று சொல்லும் நிலை.

8. பால் பாத்திரத்தின் மேலுள்ள பூனை அப்பாலைப் பருகாமல் சுவரிலுள்ள கரப்பான் பூச்சியைப் பிடிக்கத் தாவும் நிலை.

67 கே: உயிர்கள் செய்ய வேண்டியது யாது?

ப: மன சஞ்சலத்தை அடக்கி உலகியலின்பத்தைப் பெரிதெனக் கருதாது, குரு கூறும் அருளுபதேசத்தைக் கேட்டு அதன்படி ஒழுகுதல் வேண்டும்.

68 கே: அருள்வழி நில்லா உயிர்கட்கு வீடுபேறு கிடைக்குமா?

ப: கிடைக்காது.

## 5. அருளுரு நிலை

69 கே: திருவருள் உயிர்கட்கு அருள்புரிய எப்படி வருகின்றது?

ப: குருவடிவில் வருகின்றது.

70 கே: அருளே ஏன் குருவாக வரவேண்டும்?

ப: வீட்டிலுள்ள ஒருவர்க்கு வரும் நோயை அவ்வீட்டிலுள்ளோர் தான் அறிவர். அதுபோல உயிர்களிடத்திலுள்ள ஆணவமல நோயை, உயிர்களை விட்டுப் பிரியாது நிற்கின்ற இறைவன் தான் உணர்ந்து நீக்க முடியும்.

71 கே: அருளே குருவாக வந்துள்ளதை உயிர்கள் அறியுமா?

ப: அறியா.

72 கே: ஏன் அறியா?

ப: அஞ்ஞானத்தால் அறியா.

73 கே: இறைவன் மானுடச்சட்டை தாங்கிக் குருவாக வர என்ன காரணம்?

ப: மானைக்காட்டி மானைப் பிடிப்பது போலச் சகலரைத் தன் வயப்படுத்தி ஆட்கொள்ள, மானுடச்சட்டை தாங்கி வருகின்றார்.

74 கே: குரு ஏன் அவசியம்?

ப: 1. குருவினால் தான் ஞான சாத்திரப் பொருள் நன்கு விளங்கும்.

2. குருவின் அருட்பார்வையால் மாணவனின் பாசம் நீங்கும்.

3. குருவினால் மெய்ஞ்ஞானம் உண்டாகும்.

75 கே : குரு இல்லாமல் மெய்ஞ்ஞானம் உண்டாகாது என்பதற்கு ஆசிரியர் கூறும் உவமை யாது?

ப : சூரியஒளி இல்லாமல் சூரியகாந்தக் கல்லில் வெப்பம் உண்டாகாது.

76 கே : இறைவன் மூவகை உயிர்கட்கும் அருள் செய்யும் முறை யாது?

ப : விஞ்ஞானகலர்க்கு உள்நின்று அருள்செய்வான். பிரளயாகலர்க்கு முன் நின்று அருள்செய்வான். சகலர்க்குக் குருவடிவில் அருள்செய்வான்.

## 6. அறியும் நெறி

77 கே : 'இருவினைகள் நேராக நேராதல்' என்று ஆசிரியர் கூறுவதன் பொருள் யாது?

ப : இருவினை ஒப்பு. அதாவது நல்வினை, தீவினைகளால் உண்டாகும் இன்ப துன்பங்களைச் சமமாகப் பாவிக்கும் மனப்பண்பு.

78 கே : இருவினையொப்பினால் நிகழ்வது யாது?

ப : உயிர்களிடத்துத் திருவருள் பதியும்.

79 கே : அநாதிப் பொருட்கள் எவை?

ப : இறைவன், உயிர்கள், ஆணவம் கன்மம், சுத்த மாயை, அசுத்த மாயை ஆறும் அநாதிப் பொருட்கள்.

80 கே : உயிர் உய்தி பெற உணர வேண்டியது யாது?

ப : உயிர்கள் வினைகளைச் செய்கின்றன. அவ்வினைகள் நல்வினை, தீவினை எனப் பாகுபடும். அவற்றின் பலன்கள் இன்ப துன்பங்கள். அப்பலன்களைச் செய்த உயிர்கட்குத் தப்பாது இறைவன் சேர்ப்பிப்பான் என்பதை உணர்தல் வேண்டும்.

81 கே : இறைவன் உயிரோடு கலந்து நிற்கும் தன்மை எதைப் போன்றது?

ப உயிர் உடம்போடு கலந்து நிற்பது போன்றது.

82 கே : இறைவன் உயிரோடு கலந்து நின்று நடத்தும் முறைமை யாது?

ப : உயிர் தத்துவங்களில் கூடுவதற்கும், அவற்றிலிருந்து நீங்கி முக்தி அடைவதற்கும் உதவுகின்றது. அல்லது

உயிரின் தன்னியல்பையும், சார்ந்ததன் வண்ணமாம் இயல்பையும் விளக்கும்.

83 கே : அதற்கு ஆசிரியர் கூறும் உவமை யாது?
ப : படிகக்கல் தனது நிறத்தையும், தன்னைச் சார்ந்த பொருட்களின் நிறத்தையும் பெறுவதற்குச் சூரியஒளி காரணமாவதை உவமையாகக் கூறுகிருர்.

84 கே : திருவருள் மேலும் செய்யும் உதவி யாது?
ப : திருவருள் உயிர்க்குச் சிவத்தைக் காட்டுகிறது.

85 கே : உயிர் சிவத்தைக் காண செய்ய வேண்டியவை யாவை?
ப : 1. இழிந்த உலக விடயங்களில் பற்று வைக்கக் கூடாது.
2. தான் என்ற தன் முனைப்போடு செயலாற்றக் கூடாது.
3. அருள்வழியில் நிற்க வேண்டும்.

86 கே : அறியும் நெறி அதிகாரத்தில் இறுதி மூன்று குறள்களில் ஆசிரியர் எதை வலியுறுத்துகிருர்?
ப : ஆசிரியர் மாணுக்கனிடம் அருள் வழியில் நிற்க வேண்டும் என்பதை வலியுறுத்துகிருர்.

## 7. உயிர் விளக்கம்

87 கே : உயிர்கள் அருள்வழியில் நிற்க வேண்டியதற்கு ஆசிரியர் கூறும் உவமை யாது?
ப : வெயிலின் கடுமையால் வருந்துபவன் குளிர்ந்த நிழல் கண்டபோது அதில் தங்கி இளைப்பாறுவான். அது போல பிறவி வெப்பத்தால் வருந்தும் உயிர்கள் குளிர்ந்த அருளில் நின்று இன்புறும்.

88 கே : உயிர் அருளை எப்போது அறியும்?
ப : ஆணவமலம் நீங்கும் போது அறியும்.

89 கே : அதற்கு ஆசிரியர் கூறும் உவமை யாது?
ப பித்த நோயுள்ளவன் பாலின் இன்சுவையை அறியான். பித்த நோய் நீங்கினுல் பாலின் இனிமை புலப்படும். அதுபோல ஆணவமல நோயால் பிணிக்கப்பட்டிருக்கும் வரை உயிர்கள் அருளை உணரா. அந்நோயின் பிணிப்பு நீங்கினுல் அருளை உணர்ந்து அனுபவிக்கும்.

90 கே : திருவருள் உயிர்கட்குச் செய்யும் உதவி யாது?
ப : திருவருள் உயிர்களின் ஆணவ இருளைப் போக்கிச் சிவத்தைக் காட்டும்.

91 கே: எனவே திருவருள் எதாகக் கூறப்படுகின்றது?
ப ஒளியாகக் கூறப்படுகின்றது.

92 கே ஆசிரியர் ஒளியும், இருளும் ஒருமைத்து என்று கூறுவது ஏன்?
ப: இரண்டும் தன்வகைப் பொருளைக் காட்டி ஏனையதை மறைக்கும் தன்மையால், ஒத்தது. அருளானது சிவத்தைக் காட்டி உலகத்தை மறைக்கும். இருளானது (ஆணவம்) உலகத்தைக் காட்டிச் சிவத்தை மறைக்கும்.

93 கே: அருள்வழி நிற்போர்க்குச் சிவம் செய்யும் உதவி யாது?
ப: அவர்களுடைய வினைகளை இறைவன் ஏன்று கொள்வான்.

94 கே: அருள்வழி நில்லாதார் இறைவனை அடைய முடியுமா?
ப: அடைய முடியாது.

95 கே: ஏன்?
ப: இறைவன் ஐம்பொறிகள் முதலிய தத்துவங்கட்கும், உயிரறிவிற்கும் அப்பாற்பட்டவன்.

96 கே: உயிர்கள் அருளோடு பொருந்தி நிற்கும் நிலை யாது?
ப: உயிர்கள் அருளை முன்னிறுத்தித் தான் பின்னிற்றல் வேண்டும்.

97 கே: ஆசிரியர் அதனை எப்படி விளக்குகிறார்?
ப: தீச்சுடரை ஏந்திச் செல்பவன் அச்சுடரை தனக்கு முன்னே பிடித்தால் தான் பொருட்களைக் காண முடியும். பின்னே பிடித்து, தான் முன் சென்றால் பொருளைக் காண முடியாது. அதுபோல அருளை முன்னிறுத்தித் தான் பின் நின்றால்தான் சிவத்தைக் காண முடியும்.

98 கே சிவனருள் எப்படிப்பட்ட தன்மையது?
ப இறைவன் தானே முன்வந்து உயிர்கட்கு அருள் செய்யும் தன்மையுடையவன். சிவனருள் இறைவன் கொடுக்க உயிர்கள் பெறும் தன்மையுடையது. அவ்வாறின்றி உயிர்கள் வலிந்து தம் முயற்சியாலோ, வஞ்சத்தாலோ பெற முடியாது.

## இன்புறு நிலை

99 கே: திருவருளை முன்னிறுத்தி தாம் பின் செல்பவர்கள் அடையும் பலன்கள் யாவை?
ப: 1. மும்மலங்களும் நீங்கப் பெறுவர்.
2. சிவனுடன் கூடி பேரின்பம் துய்ப்பர்.

100 கே : இருவர் மடந்தையர் என்றது யாரைக் குறிக்கும்?
ப : இருவர் மடந்தையர் என்றது திருவருளையும், ஆன்மாவையும் குறிக்கும்.

101 கே ஏன்?
ப : சிவனது சக்தியாய் அவன்வழி நின்று தொழிற்படுதல் பற்றி திருவருளும், சிவனால் ஆளப்பட்டு அடங்கி நிற்கும் இயல்பால் ஆன்மாவும் பெண்ணாகக் குறிக்கப்பட்டன.

102 கே : ஒருவன், ஒருத்தி என்றது யாரைக் குறிக்கும்?
ப : ஒருவன் என்றது திருவருளுக்கு முதலாகிய ஒப்பற்ற சிவத்தைக் குறிக்கும். ஒருத்தி என்றது ஒப்பற்ற சிவத்தைக் கூடும் பக்குவநிலையிலுள்ள உயிரைக் குறிக்கும்.

103 கே : உயிர் அருளுடன் கூடும் நிலையில் உண்டாவது எது?
ப : பாச நீக்கம்.

104 கே உயிர் சிவத்துடன் கூடும் போது நிகழ்வது எது?
ப : பேரின்பம்.

105 கே : பேரின்பம் யாருக்கு உண்டாகும்?
ப : உயிர்கட்கு.

106 கே : இறைவனுக்கு உண்டாகாதா? ஏன்?
ப : இறைவனின் வடிவமே வரம்பில் இன்பமயமானது. ஆதலால் அவனுக்குப் புதிதாக இன்பம் உண்டாகத் தேவையில்லை.

07 கே : முக்தி நிலையில் சிவமும் ஆன்மாவும் கூடிய கலப்பு எப்படிப்பட்டது?
ப : சிவமும் ஆன்மாவும் பிரித்தறிய முடியாதபடி ஒன்றுபட்டு நிற்கும்.

108 கே : அதனை ஆசிரியர் எப்படி உவமை மூலம் விளக்குகிறார்?
ப : தாள், தலை என்னும் இரண்டு சொற்கள் புணர்ந்து தாடலை என்ற ஒரே சொல்லாக நிற்றல் போன்றது என்கின்றார்.

109 கே : ஏகம் என்றால் என்ன?
ப : அத்துவிதம்.

110 கே : அத்துவிதம் என்ற சொல்லுக்குப் பொருள் யாது?
ப : இரண்டாகப் பிரிந்து நில்லாதது.

111 கே : 'இரண்டாலும் ஓசை எழாது' என்ற தொடருக்கும் பொருள் யாது?

ப : ஆன்மாவும் சிவமும் இரண்டாகப் பிரிந்து நின்றால் முக்தி இன்பம் உண்டாகாது எனப் பொருள்.

112 கே : பிறப்பற்றவர்கள் யார்?

ப : இறைவனை அடைந்தவர்களும், பேரின்பம் துய்ப்பவர்களும் மோன நிலை பெற்று ஆசையற்றவர்களும் பிறவாதவர்கள்.

113 கே : உயிர் பேரின்பம் துய்க்கச் செய்ய வேண்டியது யாது?

ப : சிவசிந்தனையில் அழுந்தித் தம் செயலற்று நிற்க வேண்டும்.

114 கே : அவர்களின் சமயாசாரங்கள் நீங்கும் முறை யாது?

ப : தூங்குகிறவன் கையிலுள்ள பொருள் தானாக நழுவுவது போல சமயாசாரங்கள் தாமாக நீங்கும்.

115 கே : 'மூன்றாய தன்மை' என்று ஆசிரியர் குறிப்பிடுவது எவை?

ப : காண்பான், காட்சி காட்சிப் பொருள் என்ற மூன்று தன்மைகள்.

116 கே : பேரின்பம் பிறக்கும் இடம் எது?

ப : முற்கூறிய மூன்று தன்மைகளும் தோன்றாத இடம்.

117 கே : பேரின்பம் இப்படிப்பட்டது என்று சொல்ல முடியுமா?

ப : முடியாது.

118 கே பேரின்பம் பெற வழி யாது?

ப : இறைவனிடம் அளவற்ற அன்பு செலுத்துவதே வழி.

## 9. ஐந்தெழுத்தருள் நிலை

119 கே : வேதாகமங்கள் எதைப் பற்றிக் கூறும்?

ப : ஐந்தெழுத்தின் பொருளைக் கூறும்.

120 கே : ஐந்தெழுத்தின் பொருள் யாது?

ப : ஐந்தெழுத்தில் சி—சிவனையும், வ—அருளையும், ய—உயிரையும், ந—திரோதானத்தையும், ம மலத்தையும் குறிக்கும்.

121 கே ஐந்தெழுத்தும் எதில் அடங்கும்?

ப : ஓரெழுத்தாகிய பிரணவத்துள் அடங்கும்.

122 கே : எப்படி?

ப : ஓம்—அ+உ+ம

சிவயநம—சிவ் = அ; ய உயிர்) = உ; நம(மலம்) = ம.

123 கே : திருவைந்தெழுத்தில் ஊன நடனத்தைக் குறிப்பது எது?
ப : நம.

124 கே : ஞான நடனத்தைக் குறிப்பது எது?
ப : சிவ.

125 கே : ஊன நடனத்திற்கும், ஞான நடனத்திற்கும் உள்ள வேறுபாடு யாது?
ப :

| ஊன நடனம் | ஞான நடனம் |
|---|---|
| 1. பக்குவமில்லாத உயிர்களிடத்து நிகழும். | பக்குவமுடைய உயிர்களிடத்து நிகழும். |
| 2. உலகப்பற்றை உண்டாக்கும். | சிவனை உணரும்படிச் செய்யும். |
| 3. பிறப்பிறப்பில் அழுத்தும். | பேரின்பத்தில் அழுத்தும். |

126 கே : திரோதனசக்தியின் செயல் யாது?
ப : மலத்தைத் தொழிற்படும்படிச் செய்தல்.

127 கே : மலம் தொழிற்படுவதால் உண்டாகும் விளைவு யாது?
ப : அதன் சக்தி தேயும். மலசக்தி தேய்ந்ததும் திரோதன சக்தி அருள் சக்தியாய் மாறி விடும். மலம் நீங்கிய உயிர் அருள் சக்தியால் சிவத்தை அடைந்து இன்புறும்.

128 கே : திருவைந்தெழுத்தை ஓதும் முறை யாது?
ப : 'சி' சிவனைக் குறிப்பதால் சிவாயநம என ஓதல் வேண்டும்.

129 கே : நமசிவாய என ஓதுவது இரங்கத்தக்கது என்று ஏன் ஆசிரியர் கூறுகின்றார்?
ப : ந திரோதானத்தை உணர்த்துவதால் நமசிவாய என ஓதுவது பிறப்பிறப்பு துன்பத்தைத் தருமாதலால் இரங்கத்தக்கது என்கின்றார்.

130 கே : சிவாயநம் என ஓதுவதன் பயன் யாது?
ப : பிறவித்துன்பம் நீங்கும். வீடுபேறு கிடைக்கும்.

131 கே : ஐந்தெழுத்தருள் நிலையில் ஆசிரியர் அருளின் செயலாகக் கூறுவது யாது?
ப : 1. அருள் ஆன்மாவைச் சிவத்துடன் கூட்டி வீட்டின்பத்தைத் தரும்.
2. அருளே சிவனுக்குத் தூய திருமேனியாகும்.

132 கே : உயிர் வா சி இடை நிற்றல் முறை என ஆசிரியர் கூறுவது என்?

ப : 'சிவ ய சிவ' இதில் உயிர் வகரத்திற்கும் சிகரத்திற்கும் இடையில் உள்ளது. இங்கு உயிர் மலத்தைச் சாரவில்லை. எனவே சிவா ய சிவ என உச்சரித்தல் இன்னும் சிறப்பு எனலாம்.

133 கே : ஞான சாத்திரங்கள் உணர்த்துவது யாது?

ப : ஆன்மா சிவத்தையும், சக்தியையும் விட்டு நீங்காது நிற்க வேண்டிய நிலையை உணர்த்தும்.

## 10. அணைந்தோர் தன்மை

134 கே : அணைந்தோர் என்போர் யார்?

ப : சீவன் முத்தர்கள்

135 கே : சீவன் முத்தர்கட்கு விளக்கம் தருக.

ப : உடம்பு நீங்கிய பின் உயிர்கள் இறைவனுடன் கூடித் துய்க்கும் பேரின்பம் பரமுக்தி எனப்படும். அத்தகைய பரமுக்திநிலையை உடம்போடு கூடிய இப்பிறவியிலேயே அநுபவிப்பவர்கள் சீவன் முத்தர்கள் எனப்படுவர்.

136 கே : சீவன் முத்தர்களின் நிலை யாது?

ப : சீவன் முத்தர்கள் சிவனை அழுந்தி அனுபவித்துப் பேரின்பம் துய்ப்பது தவிர வேறு செயல்களைச் செய்யார்.

137 கே : சீவன் முத்தர்கள் சிவனைப் போன்று ஐந்தொழில் செய்வார்களா?

ப : மாட்டார்கள்.

138 கே : சீவன் முத்தர்கள் யாரைக் கண்டிருப்பர்?

ப : சீவன் முத்தர்கள் சிவனையே கண்டிருப்பர். வேறெதனையும் காணார்.

139 கே : காணாமைக்குக் காரணம் என்ன?

ப : காண விரும்பாமை.

140 கே : சீவன் முத்தர்களின் புலனடக்கத்திற்கு ஆசிரியர் கூறும் உவமை யாது?

ப : நிலத்தில் நடக்கும் ஆமை அபாயம் எதிர்ப்படும் போது தன் நான்கு கால்களையும் முகத்தையும் ஓட்டிற்குள் அடக்கி அசைவற்று கிடக்கும் நிலையை உவமையாகக் கூறுகிறார்.

141 கே : சீவன் முத்தர்களும் சிவனைப் போன்று சர்வ வியாபகர்கள் என்பதற்கு ஆசிரியர் கூறும் குறள் யாது?

ப : அவனே அகன்று எங்கு இன்றும் ஆங்கு அவனும் எங்கும் இவனே ஒழிந்து உண்டாதல் இல்.

142 கே : 'உள்ளும் புறம்பும் ஒரு தன்மைக் காட்சியர்' என்பதற்குப் பொருள் யாது?
ப : சீவன் முத்தர்கள் வெளியே பூண்டுள்ள சிவ வேடத்திற்கு ஏற்ப, அவர்கள் உள்ளமும் சிவனையே நினைந்து கொண்டிருக்கும். சீவன் முத்தர்கள் உள்ளம் சிவனையே நினைத்துக் கொண்டிருப்பதால் அவர்கள் பார்க்கின்ற வெளி உலகப் பொருட்களும் அவர்கட்குச் சிவமாகவே காட்சியளிக்கும் எனலாம்.

143 கே : 'உறும் தொழில்', 'வறும் தொழில்' என்பன யாவை?
ப : உறும் தொழில்—யான், எனது என்று அகப்பற்று, புறப்பற்றுடன் செய்யும் செயல்.
வறுந்தொழில்—பற்றற்று அருள் வழி நின்று செய்யும் செயல்.

144 கே : இரண்டிற்குமுள்ள பயன்கள் யாவை?
ப : உறுந்தொழிற்குப் பயன் பிறப்பிறப்பு.
வறுந்தொழிற்குப் பயன் வீட்டின்பம்.

145 கே : இககுறளில் (97) ஆசிரியர் வீட்டின்பத்தைக் குறிக்கப் பயன்படுத்தும் சொல் யாது?
ப : வாய்மை.

146 கே : ஏன்ற வினை, ஏறம் வினை என்பன யாவை?
ப : ஏன்ற வினை என்பது எடுத்துள்ள பிறவியில் அனுபவிக்க எடுத்து வந்துள்ள பிராரத்த வினையைக் குறிக்கும்.
ஏறும் வினை என்பது அப்பிராரத்தை அனுபவிக்கும் பொழுது உண்டாகும் விருப்பு, வெறுப்பு காரணமாக மேலும் செய்யும் ஆகாமிய வினையைக் குறிக்கும்.

147 கே : சீவன் முத்தர்கட்கு வினை தீரும் முறை யாது?
ப : அவர்களின் பிராரப்த வினை உடலால் அனுபவித்துக் கழியப்படும். பிராரப்த வினையை விருப்பு வெறுப்பின்றி அனுபவிப்பதாலும், பற்றற்று தம் செயலற்று அருள் வழியில் நிற்பதாலும் ஆகாமியவினை ஏறுது ஒருக்கால் ஆகாமியவினை உண்டாகுமேயானல் திருவருள் அதனைச் சுட்டெரித்துவிடும். குருவருள் சஞ்சிதவினைகளை அனுபவித்தற்கு வராமல் போக்கிவிடும். இவ்வாறு வினை நீங்கும்.

148 கே : 'மும்மைதரும் வினைகள்'—பொருள் யாது?

ப : 1. ஆகாமியம் (புதுவினை), சஞ்சிதம் (பழம்வினை), பிராரத்தம் (நுகர்வினை) என்ற மூவகை வினைகள்.
2. மனம்: வாக்கு, காயம் என்ற மூன்றால் செய்யப்படும் வினைகள்.
3. இம்மை மறுமை அம்மைப் பலன்கள் தரும் வினைகள்.

149 கே : 'முதறிவாளர்க்கு அம்மையும் இம்மையே ஆம்' என்பதன் பொருள் யாது?
ப : சீவன் முத்தர்கள் பரமுக்தியை (அம்மை), உடம்போடு கூடிய இப்பிறப்பிலேயே (இம்மை) அனுபவிப்பர் என்பதாம்.

150 கே : கள்ளத் தலைவர் யார்?
ப : சிவனுடைய தலைமையை மறந்து தம்மையே தலைவர்களாகக் கருதும் பெத்தான்மா.

151 கே : சீவன் முத்தர்கள் அவர்கட்குச் செய்யும் உதவி யாது?
ப : சீவன் முத்தர்கள் அவர்கள் துன்பம் கண்டு இரங்கி, தாம் வாழும் தெய்வீக வாழ்க்கை மூலமும், தம் அருளுபதேசம் மூலமும் அவர்கட்கு ஞானமார்க்கத்தைக் காட்டி உய்யும்படி உதவுவர்.



